# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது – சித்திரை, வைகாசி
2022 – ஏப்ரல், மே



28.05.2022 அன்று நடைபெற்ற நூல் வெளியீட்டு விழாவில்
தவத்திரு. குன்றக்குடி பொன்னம்பல அடிகளாருடன், சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


சுபகிருது – சித்திரை & வைகாசி

2022 – ஏப்ரல் & மே இதழ் – 118 & 119



சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. ம. கார்மேகம்

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


## பொருளடக்கம்




தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00



# இறை வணக்கம்



காம்பனைய தோள் அழகி கயிலாயத் தான்துணைவி
    கயற்கண்ணி கார்மேகக் குழலி வையம்
    காப்பவன்தன் பின்பிறந்தாள் கழனி வாயில்
    கண்டுவந்த காரிகையாள் கழுத்தைச் சுற்றிப்
பாம்பாட வீற்றிருப்பான் உடல்பாதி இடங் கொண்ட
    பங்கயத்தாள் கொண்டமயில் பக்த ரெல்லாம்
    பார்க்கமகிழ் பரமேட்டி நூபு ரங்கள்
    பண்பாட வருஞ்செல்வி பவள வாயாள்
ஆம்பல்போல் இதழுடையாள் அரனவன்தாள் மறவாதாள்
    ஆரணங்கள் இவள்பெருமை அறையக் கேட்பாள்
    அம்பலத்தான் நடங்காணும் அரிவை யாகி
    அவன் ஆடல் கண்டுவக்கும் அழகு மங்கை
தூம்புடைய மதுவாவித் தோகையிவள் நமக்கெல்லாம்
    துணையென்பார் நிலையுயர நம்மை வாழ்த்தித்
    தொலையாத பேரின்பம் நல்கு வாளைத்
    துணையென்று நாம்கொண்டால் துன்பம் தீரும்!

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

கொரானா பெருந்தொற்று கடந்த 3 ஆண்டுகளாக உலகம் எங்கும் பரவி, துயர் கொடுத்து அனைத்தையும் கெடுத்துவிட்டது. குறிப்பாகப் பயணத்துறையும், அது சார்ந்த உணவகங்கள் போக்குவரத்து சாதனங்கள் மற்றும் கல்வித்துறை மிக அதிக அளவில் பாதிக்கப்பட்டுள்ளன. நாம் பத்திற்கும் மேலான கல்வி நிறுவனங்களை நடத்தி வருவதால் பொருளாதார ரீதியாக மிகுந்த கஷ்டத்திற்கு ஆளாகி உள்ளோம். மிகவும் வரவு குறைச்சலான நிறுவனங்களில் நான்கு ஐந்து ஆசிரியர்களை வேலையிலிருந்து நிறுத்த வேண்டிய கட்டாயத்திற்கு ஆளானோம்.

இந்தச் சூழ்நிலையில் வருகின்ற கல்வியாண்டில் நம் கல்வி நிறுவனங்களை எவ்வாறு கொண்டு செலுத்துவது? அதற்குச் சரியான வழிமுறைகள் யாவை? என்று சிந்திக்க நாம் நம்முடைய அறங்காவலர்களையும், பெரிதும் பாதிக்கப்பட்டுள்ள மேல்நிலைப்பள்ளி, தொடக்கப்பள்ளி, மழலையர் பள்ளிகள் ஆகியவற்றின் ஆசிரியர்களையும் சந்தித்துப் பேசி முடிவெடுக்க விரும்பினோம்.

அதன் முதல் கட்டமாக நம்முடைய அறங்காவலர்களைத் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு பேசினோம். அவர்கள் கூறிய செய்திகள் மிகுந்த மன நடுக்கத்தைத் தரக் கூடியவையாகவும் கவலை தரக்கூடியதாகவும் இருந்தன. கொரானா காலத்தில் தொடங்கிப் பரவிய இணைய வழிக் கல்வி மாணவர்களிடையே மிகப்பெரிய பாதிப்பை, ஒழுக்கத் தளர்வை ஏற்படுத்தி உள்ளது. சில மாணவர்கள் அந்தரங்க உறுப்புகளை அலைபேசியில் படம் எடுத்து மாணவிகளுக்கு அனுப்புவதாகவும் அவற்றிற்குச் சில மாணவிகள் பதில் அளிப்பதாகவும் தெரிவித்தார்கள். இச்செய்தி நம் மனதை மிகவும் நடுங்கச் செய்தது. நம் காலத்தில் பள்ளி, கல்லூரிகளிலே கழிப்பறைகளில் மட்டும் மாணவர்கள் சின்னச் சின்ன ஆபாசச் செய்திகளை, படங்களைக் கலர்

சாக்பீஸ் கொண்டு எழுதி வைப்பார்கள் ஆனால் நேரில் அவரவர்களுக்குள்ள பண்போடும், மரியாதையோடும் நடந்து கொள்வார்கள். இப்பொழுது அலைபேசியின் காரணமாக ஒழுக்கக் கேடு பெரும் அளவில் அச்சம் தரக்கூடிய அளவில் வளர்ந்து உள்ளது. இதனைப் பற்றி நம் மேல்நிலைப் பள்ளியின் முதல்வர் அவர்களிடம் பேசினேன். அவர்கள் சொன்ன பதில் மேலும் அதிர்ச்சியைத் தந்தது. சாமி! முன்னர் மாணவர்கள் மட்டுமே 50-60 சதவீதம் அளவிலே மனக்களங்கம் ஒழுக்கக்குறைபாட்டோடு இருந்தார்கள். மாணவிகள் களங்கம் இன்றி இருந்தார்கள். ஆனால் இப்பொழுது மாணவர்களிடையே 80-90 சதவீதம் வளர்ந்துள்ளது. மாணவிகளுக்கிடையே களங்கம் 0 சதவீதத்திலிருந்து 50-60 சதவீதம் வளர்ந்திருக்கிறது. இதனை நாம் கட்டுப்பாட்டிற்குக் கொண்டுவரவேண்டும்; அதற்குரிய வழி முறைகளைச் சிந்திக்க வேண்டும் என்றார். இதனைக் கேட்டவுடன் சமுதாயமே ஒழுக்கம் தவறிய நிலை வந்துவிடுமோ என்று அச்சப்பட்டேன். நம்முடைய அறங்காவலரில் ஒருவர் சாமி! இனிமேல் கல்வி நிறுவனங்களைத் தொடங்குவதோ, வளர்ப்பதோ வேண்டாம். இருப்பதை முடிந்தவரை நடத்தப் பாருங்கள். முடியாத நிலையில் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்திவிடுங்கள். இனிமேல் கல்வித்துறைக்குச் செலவழிக்கும் பொருள் கிணற்றிலே போட்ட நோட்டுக் கட்டுகளாகத்தான் இருக்கும். மீண்டு வர வாய்ப்பே இல்லை என்றார்கள். இதனைக் கேட்டவுடன் பகீரென்றாகியது. இரண்டு மூன்று நாட்கள் வேறு சிந்தனையே இல்லாமல் இதனைப் பற்றியே சிந்தித்தேன். குளம், கிணறு வேண்டாத அசடுகளால் கலங்கிப் போய்க் கிடந்தால் அழுக்குகளை அகற்றாமல் விடுவது நல்லதல்ல; நாள் போகப்போகத் தூர்த்து விட்டால் தண்ணீர்ப் பஞ்சம், நிலத்தடி நீர்ப்பஞ்சம் உருவாகி நாடே சீர்கெடும். ஆனால் இணைய வழிக்கல்வி கணினிப் பயன்பாடு அலைபேசிப் பயன்பாடு இவை அனைத்தும் முன்னேற்றத்திற்கான சாதனங்களே. இதனால் அரிய நன்மைகள் மாணவச் சமுதாயத்திற்கும், மக்கள் சமுதாயத்திற்கும் ஏற்படும்; எந்தக் கருவியிலும் எப்பொழுதும் நன்மை

தீமை என இரண்டு குணங்கள் உண்டு. அதில் பயன்தரக்கூடிய பகுதிகளை மட்டுமே பயன்படுத்திக் கேடு விளைவிக்கக் கூடியவைகளைத் தவிர்க்க வேண்டுமே ஒழிய ஒட்டுமொத்தமாக முன்னேற்றக் கருவிகளை ஒதுக்கிவிடக் கூடாது. எனவே தவறான வழியில் செல்கின்ற மாணவர்களை நல்வழிப்படுத்த முயல வேண்டும். அலைபேசியையோ இணைய வழிக் கல்வியையோ முழுமையாக ஒதுக்கி விடமுடியாது. ஒதுக்கக்கூடாது.

எனவே குளங்களை ஆறுகளை கிணறுகளை தர்மஸ்தாபனங்கள் தங்களுடைய முயற்சியால் சுத்தப்படுத்தி நன்னீர்க் குளங்களாக மாற்ற வேண்டுமே தவிர அதை ஒதுக்கக்கூடாது. தற்காலிக சிரமத்திற்காக நிரந்தரமான கேடு ஒன்றைக் கல்வித் துறைக்குக் கொடுக்கக் கூடாது என முடிவு செய்தேன். நம்முடைய கிளைமடமான புறவாச்சேரி KAP மடத்தில் 21 ஆசிரியப் பெருமக்களைச் சந்தித்து விவாதித்தோம். ஆசிரியப் பெருமக்களும் சிரமத்தை ஒப்புக்கொண்டு இந்த ஆண்டு பெரும் முயற்சி எடுத்துக்கொண்டு இருக்கின்ற ஸ்தாபனங்களை நல்ல முறையில் நடத்துவோம். ஓரிரு ஆண்டுகளுக்குப் பள்ளிகளில் புதிய வகுப்புகளைத் தொடங்குவதை நிறுத்தி வைப்போம். சூழ்நிலையைப் புரிந்துகொண்டு குறைகளைக் குறைத்துப் பற்றாக்குறை இல்லாமல் பார்த்துக்கொள்வோம் என்று உறுதி கூறினார்கள்.

அனைத்து ஆசிரியப் பெருமக்களுக்கும் நம் நன்றி. சொன்னதைச் செய்வார்களாக. கல்வி நிறுவனங்களைத் தூக்கி நிறுத்துவார்களாக!

***ஆசீர்வாதங்கள்***



## 18. திருக்கண்ணங்குடி

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் பதினெட்டாவது திவ்ய தேசம், திருக்கண்ணங்குடி; சோழ நாட்டுத் திருப்பதிகளுள் இது பதினெட்டாவது திருத்தலமாகும். திருவாரூரிலிருந்து நாகைப்பட்டினம் செல்லும் சாலையில் உள்ள ஆழியூரில் இறங்கிச் சுமார் 5 பர்லாங்கு தொலைவு நடந்து சென்றால் இப்பதியை அடையலாம்.

பஞ்சகிருஷ்ண க்ஷேத்திரங்களான திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருக்கவித்தலம், திருக்கோவிலூர், திருக்கண்ணங்குடி ஆகியவற்றுள் இத்தலமும் ஒன்றாகும். இத்தலத்தைப் பஞ்சபத்ரா என்றும் கூறுவர். ஆறு, காடு, நகரம், ஆலயம், தீர்த்தம் ஆகிய இவ்வைந்தினாலும் இத்தலம் புகழ்பெற்ற இடமாதலால், பஞ்சபத்ரா என்று ஆயிற்று.

கிருஷ்ண பக்தியில் சிறந்தவர் வசிஷ்ட முனிவர். வசிஷ்டர் வெண்ணெய்யில் கிருஷ்ண விக்கிரகம் செய்து வழிபடுவார். வெண்ணெய் இளகித் திரவமாகும் இயல்புடையது. ஆனால் வசிஷ்டர், தமது பக்தியின் மேலீட்டால், அவ்வெண்ணெய் இளகித் திரவமாகாதவாறு, கட்டி வைத்து, திவ்ய மங்கள விக்கிரகமாகச் செய்து, தியானத்தில் ஈடுபடுவார். வசிஷ்டரின் பிடிக்குள் கண்ணன் கட்டுண்டு நின்றான்.

ஒரு நாள், கிருஷ்ணர், சிறு குழந்தையாக, கோபாலனாக வடிவங்கொண்டு, ஆராதனைக்குச் செய்து வைத்திருந்த வெண்ணெய்க் கிருஷ்ணரை, அப்படியே எடுத்து விழுங்கிவிட்டு ஓட்டம் பிடித்தார். இதைக் கண்ட வசிஷ்டர் கோபாலனை விரட்டிக் கொண்டே செல்கின்றார்.

கிருஷ்ணாரண்ய தலமான, இத்திருக்கண்ணங்குடியில், மகிழ மரத்தின் கீழ், மஹாவிஷ்ணுவைக் குறித்து, எண்ணற்ற ரிஷிகள் தவம் செய்து கொண்டிருந்தனர். இப்பகுதிக்குள் தான், வசிஷ்டர் செய்த

வெண்ணெய்க் கிருஷ்ணரை விழுங்கிய கண்ணன் ஓடி வருகின்றான். அவனை, தமது ஞான திருஷ்டியால், கிருஷ்ணன் என அறிந்த ரிஷிகள், தமது பாசக்கயிற்றால் கட்டுண்ணப் பண்ணி நிறுத்தினர். இவ்வாறு, கண்ணன் தாம்புக் கயிற்றால் கட்டுண்டதால், தாமோதரன் ஆனான்.

கட்டுண்ட கண்ணன், வசிஷ்டர் தம்மை விரட்டி வருவதாகவும் அதற்குள் வேண்டிய வரத்தைக் கேட்குமாறும் அவசரப்படுத்தினான். அவர்களோ, எங்களுக்குக் காட்சி கொடுத்ததைப் போலவே, இங்கேயே நின்று எப்போதும் காட்சியருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர்.

வேண்டுதலுக்கு இணங்கி நின்ற தாமோதரனை, வேணுகானனை, விரட்டி வந்த வசிஷ்டர், அவனது பாதாரவிந்தங்களைப் பற்றிக் கொண்டார்.

இங்குள்ள,
மூலவர் - லோகநாதன், சாமமேனிப் பெருமாள், அதாவது சியாமளமேனிப் பெருமாள்
தாயார் - லோகநாயகி
உற்சவர் - தாமோதர நாராயணன், ஸ்ரீதேவி, பூதேவி உடன் இடது கையை இடுப்பில் கொண்டு கண்ணன் நிற்கும் கோலம்
உற்சவத் தாயார் - அரவிந்தநாயகி
விமானம் - உத்பலவதாக விமானம்
தீர்த்தம் - சிரவண புஷ்கரிணி - பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே சகல பாபங்களையும் போக்க வல்லது
தலவிருட்சம் - மகிழமரம் என்ற வகுளமரம்
கோலம் - கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம்

இங்கு, தாயாரும் உற்சவத் தாயாரும் ஒரே ஜாடையில் இருப்பர். இது வேறெங்கும் காண முடியாத அழகாகும். மற்ற தேசங்களில், கருடாழ்வார் இரண்டு கரங்களைக் குவித்து வணங்கும் நிலையில் இருப்பார். ஆனால், இத்தேசத்தில், கருடாழ்வார், வைகுண்டத்தில் எழுந்தருளியுள்ள காட்சி போல், இரண்டு கைகளையும் கட்டிக்கொண்டு தரிசனம் தருகிறார்.

இத்தலத்தில் நடைபெறும் திருவிழாக்களில், சிறப்பான விழா, சித்திரை மாதம் பிரம்மோத்சவத்தில் கொண்டாடப்படும் திருநீறணி விழா. இவ்விழாவின் போது, பெருமாள் திருநீறு அணிந்து கொள்கிறார். இந்நிகழ்ச்சி மூன்றே முக்கால் நாழிகை மட்டுமே நடைபெறும். இதற்கு அனைவரும் திருநீறு அணிந்தே வருவர். இவ்விழா சைவ வைணவ ஒற்றுமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

இத்தலம் 5 அடுக்கு இராஜகோபுரத்தை உடையது. இத்தலத்தை, திருமங்கையாழ்வார் மட்டும் 10 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ. நா.மீனவனார் திருக்கண்ணங்குடி குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. வசிஷ்டர் வெண்ணெய் வடிவில், கண்ணன் உருவை அமைத்து வணங்கினார். அவ்வெண்ணெய் விழுங்கிய கண்ணன், முனிவர்களின் பக்தியெனும் பாசக்கயிற்றால் கட்டுண்டான். கண்ணனே வந்து தங்கி, எல்லோர் மனங்களிலும் குடியேறிய இடம் தான் இத்திருக் கண்ணங்குடி. இத்தலத்தில், அவ்வசிஷ்டர் தொழுத கண்ணனின் திருவடியைக் கைகுவித்து வணங்கச் சொல்லும் முதல் பாடல் :

*கண்ணங் குடியதனில் கட்டுண்டான் முனிவர்க்காய்*
*வெண்ணெய் வடிவில் விளங்குருவாய்த் தானமைத்து*
*விண்ணோர் தொழும்வசிட்டன் விரும்பி வணங்கியநல்*
*கண்ணன் திருவடியைக் கைகுவித்து வணங்குமினே*

2. சியாமள மேனியனை, அதாவது நீலமேகவண்ணனை, சாமமாமேனி என்ற திருநாமம் உடையவனை, லோகநாயகித் தாயாரின் போற்றுதலுக்கு உரியவனை, உற்சவத் தாயார் அரவிந்த நாயகியை விரும்பும் பெருமாளை உளமார வணங்கச் சொல்லும் இரண்டாம் பாடல் :

*திகழ்நீல மேகம்எனும் திருநாமம் உடையானைப்*
*புகழ்உலக நாயகிதன் போற்றுதலுக்(கு) உரியவனை*
*அகமகிழும் தாயாம் அரவிந்த நாயகியை*
*உகந்த திருமாலை உளமார வணங்குமினே*

3. திருக்கண்ணங்குடிக்கு அருகில் உள்ள மற்ற நான்கு தலங்களையும், இதனுடன் சேர்த்து, பஞ்சநாராயணதலம் என்றும் வழங்குவர். பஞ்சநாராயணதலங்கள் பின்வருமாறு :

ஆபரணதாரி ஆனந்தநாராயணன்

பெரிய ஆலத்தூர் வரதநாராயணன்

தேவூர் தேவநாராயணன்

கீவளூர் யாதவநாராயணன்

திருக்கண்ணங்குடி தாமோதர நாராயணன்

இவ்வாறு பஞ்சநாராயண தலங்களுள் ஒருதலமான திருக்கண்ணங்குடியில் இருந்தருளும் சாமமாமேனி என்னும் சியாமளமேனிப் பெருமாளான தேவாதி தேவன் இருக்கும் திசைநோக்கி நம்மைத் தொழச்சொல்லும் மூன்றாம் பாடல் :

*தேவூர்நல் ஆபரண தாரியுடன் நன்றாய*
*மூவர்தொழத் திருக்கண்ணங் குடிமுதலாய் ஐந்துதலம்*
*சேவிக்க இருந்தருளும் சியாமளநல் மேனியனைத்*
*தேவாதி தேவன் திசைநோக்கித் தொழுதிடுமே*

4. திருக்கண்ணங்குடி என்னும் இவ்வனம், கண்ணவனம், கருணைவனம், மூவுலகையும் அளந்த நாயகன் வாழ்கின்ற வனம், மகிழமரம் உள்ள வனம், இவ்வனத்தைக் கண்டவர்கள் நலம்பெறுவர் என்பது உறுதி. அதனால் இவ்வனத்தைத் தினந்தோறும் தொழுதிடுங்கள் எனக் கூறும் நான்காம் பாடல் :

*கன்னவனம் என்றழைக்கும் கருணைவனம் இந்தவனம்*
*மண்ணளந்த நாயகன்வாழ் மகிழமரம் உள்ளஇடம்*
*கண்ணமங்கை என்றதலம் கண்டபேர் நலம்பெறுவர்*
*திண்ணமென எண்ணிநீர் தினந்தோறும் தொழுதிடுமே*

5. உறங்காப்புளி, தோலாவழக்கு, ஊறாக்கிணறு, காயாமகிழ் என்ற தொடர்கள், திருமங்கையாழ்வாருக்கும் இத்தலத்திற்கும் உள்ள தொடர்பை விளக்கும் சிறப்புத் தொடர்களாகும்.

திருமங்கையாழ்வார் திருவரங்க மதில்கள் கட்டும் பணியில் ஈடுபட்டிருந்த பொழுது, நிதிப் பற்றாக்குறை ஏற்பட்டது. அதுசமயம்,

நாகைப்பட்டினத்தில் தங்கத்தினாலான புத்தர்சிலை ஒன்று இருப்பது தெரியவந்தது, அச்சிலையை நோக்கி,

***ஈயத்தால் ஆகாதோ இரும்பினால் ஆகாதோ***
***பூயத்தால் மிக்கதொரு பூதத்தால் ஆகாதோ***
***பித்தளை நற்செம்பு களாலா காதோ***
***மாயப் பொன்னும் வேண்டுமோ***
***மதித்து உன்னைப் பண்ணுகைக்கே***

என்று அறம் பாடியவுடன், சிலை அப்படியேயிருக்க, அதனைச் சுற்றி வேயப்பட்ட தங்கம் மட்டும் வந்து விழுந்தது.

அத்தங்கத்தை எடுத்துக் கொண்டு திருவரங்கத்திற்குச் செல்வதற்காக, இவ்வூரின் வழியே வந்தவர், நடந்த கால்கள் நொந்ததால், சாலையோரத்தில் உள்ள புளியமரத்தினருகில், உழுது போட்ட நிலம் ஒன்றில், அத்தங்கத்தைப் புதைத்துவிட்டு, மரத்தடியில் படுத்து இளைப்பாறினார். களைப்பு மேலிட்டதால், அவருக்கு உறக்கம் வர, புளியமரத்தைப் பார்த்து, உறங்காமல் நீ இருந்து, அத்தங்கத்தைக் காப்பாற்று என்று கூறிவிட்டுக் கண்ணயர்ந்தார். அம்மரமும் அன்றிரவு உறங்காப்புளியாய் இருந்து தங்கத்தைக் காப்பாற்றியது.

பொழுது புலர்ந்தது. அப்புளியமரம் தனது இலைகளை திருமங்கையாழ்வார் மேல் உதிர்த்து, அவரை எழுப்பியது. அவரும், தங்கத்தை எடுத்துக்கொண்டு கிளம்பலாம் என யத்தனித்த போது, நிலத்தின் சொந்தக்காரர் வந்துவிட்டார். அவர், திருமங்கையாழ்வாரை எழுந்து போகச் சொல்கிறார். புதைத்து வைத்த தங்கத்தை எடுக்காமல், எப்படிச் செல்வது என்று திகைத்த திருமங்கையாழ்வார், சட்டென்று இது என்னுடைய நிலம் அன்றோ! நீர் யார்? என்று திருப்பிக் கேட்க, நிலச்சொந்தக்காரர் அதிர்ந்து போய்விட்டார். நிலத்தின் சொந்தக்காரர் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் தங்கமிருந்த இடத்தைவிட்டு, திருமங்கையாழ்வார் சிறிதும் அசையவில்லை.

வாதம் முற்றி, விவகாரம் பஞ்சாயத்தாரிடம் வழக்காக வந்தது, நிலத்தின் பட்டாவைக் காட்டுமாறு, திருமங்கையாழ்வாரிடம், பஞ்சாயத்தார் கேட்டனர், பட்டா, திருவரங்கத்தில் இருக்கிறது என்றும்,

அதை உடனே கொண்டு காண்பிக்க இயலாது; ஒரு நாள் அவகாசம் தாரும் எனச் சொல்லிவிட்டு, அன்றிரவு அங்கேயே தங்கி ஓய்வெடுத்தார், திருமங்கையாழ்வார்.

ஓய்வெடுத்துக் கொண்டிருந்த திருமங்கையாழ்வாருக்குப் பசியும் தாகமுமாக இருந்தது. அந்த ஊர்க் கிணற்றடியில், நீர் இறைத்துக் கொண்டிருந்த பெண்களிடம், குடத்தில் தண்ணீர் கேட்டார். நிலத்தைத் தன்னுடையது என்று சொன்னவர், குடத்தை வாங்கிக் கொண்டு, அதனையும் தன்னுடையது என்று சொல்லிவிடுவாரோ என்று பயந்த பெண்கள், தண்ணீர் கொடுக்க மறுத்தனர். அதனால், கோபமடைந்த திருமங்கையாழ்வார், அக்கிணறு ஊறாமல் போகக் கடவது என்று சபித்துவிட்டார். ஊரிலுள்ள நீர்நிலைகளிலுள்ள நீர் உப்புநீராகப் போகட்டும் என்று சாபம் விட்டுவிட்டார். அதனால், அவ்வூரிலுள்ள கிணறுகள் ஊறாக்கிணறுகள் ஆகின.

பின் களைப்போடும் மயக்கத்தோடும், அங்கிருந்த மகிழ மரத்தடியின் கீழ் அயர்ந்து அமர்ந்தார் திருமங்கை; அப்போது, ஒருவர் வந்து உண்ண உணவும் அருந்த நீரும் கொடுத்தார். இருந்த களைப்பில், உணவை உண்டு, நீரைப் பருகிய திருமங்கை, நன்றி சொல்வதற்காக நிமிர்கின்றார். உண்டி கொடுத்தோனை எங்கும் காணாது பேராச்சர்யப்படுகின்றார். எல்லாம் எம்பெருமானின் திருவுள்ளம் என்று அகமகிழ்கின்றார். தனது களைப்பைப் போக்கிய மருத மரத்தை, காயாமகிழ் மரமாக இருக்க வாழ்த்துகிறார். அவ்வாறே, பூக்காமல், காய்க்காமல் என்றும் இளமையாகவே, பலகாலங்கள் இருந்து வந்த அம்மகிழ மரம் ஒரு புயலில் விழுந்துவிட்டபடியால், மற்றொரு மகிழமரம் நடப்பட்டு, அம்மரமும் இன்றளவும் காயாமகிழ் மரமாகத் தான் இருந்து வருகின்றது.

பின் நன்கு இருட்டியதும், மண்ணைத் தோண்டித் தங்கத்தை எடுத்து மடியில் கட்டிக் கொண்டு, இரவோடு இரவாக ஊரை விட்டுக் கிளம்புகிறார். யாரோ தன்னைப் பின்தொடர்வது போலத் தோன்ற, திரும்பிப் பார்க்கிறார், திருமங்கை; வந்தவர், நான் ஊர்க்காவலன் உங்களுக்குத் துணையாய் ஊர் எல்லை வரை வருகிறேன் என்று சொல்லி, ஊர் எல்லை வரை வருகிறார். ஊர் எல்லை வந்தவுடன்,

திரும்பிப் பார்த்தால், சங்கு சக்கரத்தோடு காட்சி கொடுத்தார், அந்த ஊர்க்காவலன்.

நிலப்பத்திரத்தை நாளைக்குக் கொண்டு வந்து காட்டுகிறேன், என்று சொன்ன திருமங்கை, இரவோடு இரவாக அவ்விடத்தை விட்டுக் கிளம்பியவர், மறுபடியும் இப்பக்கம் வரவேயில்லை. அதனால் நிலச் சொந்தக்காரன், அவர்மேல் கொடுத்த புகாரும் வழக்கும் தீர்க்கப்படாமல் அப்படியே நின்று, தோலா வழக்காகி விட்டது.

இத்தகைய சிறப்புகளையும் பெருமைகளையும் உடைய திருக்கண்ணவனத்தை வணங்கச் சொல்லும் ஐந்தாம் பாடல் :

*தீராத வல்வழக்கு தினம்உறங்காப் புளியமரம்*
*ஊராக் கிணற்றுடனே ஒருநாளும் காயாத*
*பேருடைய மகிழமரம் என்றபல பொருளையெலாம்*
*சீராகக் கொண்டதிருக் கண்ணவனம் வணங்குதுமே*

அலைகளையுடைய பெரிய கடலில், விசாலமான ஒளியுடைய அனந்தாழ்வான் என்ற படுக்கையிலே சயனித்திருப்பவன், பாஞ்சசன்னியத்தைக் கைகளில் தரித்தவன், தாமரை மலரை நாபியில் உடைய, சியாமளமேனிப் பெருமான், என்தலைவன், அருள்புரியும் தலம், ஆறு வேதாங்கங்கள், ஐவகை யாகங்கள், நான்கு வேதங்கள், அரிய கலை நூல்கள் ஆகியவற்றைக் கற்று, மூன்று அக்னிகளையும் வளர்க்கும் கலங்காத மனமுடைய வேதியர் வாழும் திருத்தலமே திருக்கண்ணங்குடி என்று கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*வங்க மாமுந்நீர் வரி நிறப்பெரிய வாளரவினணை மேவி*
*சங்கமார் அங்கைத் தடமலருந்திச் சாமமாமேனி என் தலைவன்*
*அங்கமாறு ஐந்து வேள்வி நால் வேதம் அருங்கலை பயின்று*
*எரிமூன்றும்*
*செங்கையால் வளர்க்கும் துளக்கமில் மனத்தோர்*
*திருக்கண்ணங்குடியுள் நின்றானே*

(தொடரும்...)

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 15

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

பைந்தமிழ்ப் பரந்தாமன் பாமாலையில் 75 ஆவது திவ்யதேசமாகக் கூறப்பட்டுள்ளது திருவனந்தபுரம் என்பதாகும். மலையாள நாட்டின் அரசாளுமைக்குரிய இன்றியமையாத அரசமரபும் சமஸ்தான மரபும் ஒருங்கே அடுத்தடுத்துக் கொண்ட கேரளத்தின் தலைநகரமே இந்தத் திருவனந்தபுரமாகும்.

108 திவ்யதேசப் பிரபாவத்தில் இத்திருவனந்தபுரம் குறிப்பிடத் தகுந்ததோர் தேயமெலாம் நின்றிறைஞ்சும் தனித்த சிறப்புக் குரியதாகும் என்கிறார் காப்பியக் கவிஞர் மீனவனார்.

தாயார் ஸ்ரீ அரிலட்சுமி உடனாய் ஆனந்தமாய அனந்த சயனத்தில் கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் கிடந்த கோலச் சேவை சாதிக்கும் மூலவரே எம்பெருமான் அனந்தபத்மநாபன் ஆவார்.

ஹேமகூட விமானத்தின் கீழ் புஜங்க சயனமாகக் கிடக்கும் பரந்தாமனை நம்மாழ்வார் மட்டுமே மங்களாசாசனம் செய்துள்ளார் எனக் கூறிப் பல்வேறு விருத்தாந்தங்களைக் குற்றால அருவி போல் குளிர் தமிழில் நம்மைக் குளிப்பாட்டுகிறார் மீனவர். வைணவ தத்துவார்த்தத்தின் படி மூவர்க்கு முதல்வனாய் ஆதிமூலப் பரம்பொருளாய் உள்ளவரே இந்த அனந்த பத்மநாபன் ஆவார். உலகம் யாவையும் தாமுள ஆக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் ஆகிய முத்தொழிலையும் ஒருங்கே செய்யும் ஒரே கடவுள் இவரே!

இவர்தம் வயிற்றிலிருந்து உலகைப் படைக்கிறார்; தம் தாமரைக் கண்களின் அருளினால் பாதுகாக்கின்றார்; தம் திருப்பாதங்களில் ஆன்மாக்களைச் சங்கமம் ஆக்கிக் கொள்கிறார் - என்பது வைணவச் சித்தாந்தமாகும்.

இதற்கேற்ற புராணப்பாங்கான கதைகள் உண்டு. தருமத்தின் சின்னமாம் பாற்கடலில் ஞானத்தின் சின்னமாம் ஆதிசேடப் பாம்புப் படுக்கை மீது பள்ளி கொண்டு உலக உயிர்களின் கரும வினைகளின் பலாபலன்களை முறையாக ஊட்டவல்ல யோக மூர்த்தியாகச் சேவை சாதிப்பதே திருவனந்தபுரத்தத்துவம் என்கிறார் மீனவர்.

இதுவே அகில உலக விவிலிய வேதாகமத் திருமறைத் தத்துவமாக உள்ளதன் ஒப்பீட்டையும் கூறிச்சமயப் பொதுமையுடன் அனந்த பத்மநாபரைச் சேவிக்க வைக்கும் மீனவர், வானுலவு –

*பருதியென விளக்கொளிகள் பகலாக்கி ஒளிகாட்டும்*

*திருவனந்தைக் கோமானின் திருப்பாதம் வணங்குமினே!*

என்றார். பல்லோர் தொழும் அனந்த பத்மநாபன் – என்றும் கூறுகிறார். இடராய எல்லாம் கெடும் என்று நம்மாழ்வார் கூறுதற்கேற்பத் திருவனந்தபுரப் பாமாலைப்பாக்கள் அமைந்துள்ளன எனலாம். நல் திருவனந்தை ஈங்குற்றார் நலம் பெறுவார். இறைஞ்சுவார் தீவினைகள், வாங்குவார் ஆதலினால் வணங்கிப் பணியுமினே! என்பது மீனவர் திருவாக்கு.

தீவினைகளை வாங்குவார் என்றது ஆன்மாக்களைச் சுத்தீகரிப்புச் செய்வதன் குறிப்பாகும். அதாவது ஆன்மாக்களின் தீமைகளைப் பத்மநாபர் வாங்கிக் கொள்ள, ஆன்மா தூய்மை அடையும் என்பது கருத்து. எனினும் வாங்கிக் கொண்ட தீவினைகள் அழியுமா? அழியாதா? என்ற ஐயம் ஏற்படுவதால் மீனவர் மிக நேர்த்தியாக வாங்குதல் என்ற சொல்லை அழித்தல் என்ற பொருளில் கூறியதாக உணரவைத்தார் எனலாம்.

மூங்கில் இலைமேலே தூங்கும் பனிநீரை வாங்கும் கதிரோனே – என்ற தனிப்பாடலில் கூறும் வாங்குதல் என்றது, அழித்தல் என்ற பொருளைத் தருவதால் அனந்த பத்மநாபரை இறைஞ்சுவார்களின் தீவினைகள் மாளும் என்பதாகக் கூறப்பட்டதாய் உணர வேண்டும் எனலாம்.

இந்த அழகிய திவ்ய தேசத்தின் வரலாற்றைக் கூறுவார் போலக் காப்பியக் கவிஞர், அனந்த பத்மநாபர் சந்நிதியுடன் ஆஞ்சநேயர் பத்மநாபரின் அருள் வேண்டி அமர்ந்திருப்பதாகக் கூறிச் சேவாதிகளாகிய நம்மைத் திருவனந்தைக் கோமானின் திருப்பாதத்தை வணங்கச் சொல்கிறார்.

*உருகாத வெண்ணெயினை உடலணிந்த மாருதியான்*

*அருள் விரும்பித் தென் புறத்தில் அமர்ந்திருக்க...* என்பது கவிஞர் வாக்கு. இப்படி ஆஞ்சநேயரைப் போல் நம்மை வணங்க

வைத்த அளவில் திருவனந்தபுரத்தின் பகுதியை ஒட்டிய திருவட்டாறு எனும் திவ்ய தேசத்திற்குக் கூட்டிச் செல்லும் கவிஞர் இத்திருவட்டாறு தான் திருவனந்தபுரத்திற்கு முந்திய ஆதித்திருத்தலம் எனச் சிலாகித்துக் கூற ஆதிகேசவப் பெருமான் என்னும் பெயருடன் சேவை சாதிக்கும் பரந்தாமனை நாம் சென்று சேவிக்கின்றோம்.

மேற்கு நோக்கிய திருமுகத்துடன் ஆதிகேசவப் பெருமாள் - புஜங்கசயனத்தில் மரகத வல்லி நாச்சியாருடனாய் சேவாதிகளுக்குச் சேவை சாதிக்கின்றார் எனக் கீழ்க்கண்ட பாடலால் மீனவர் பாடுகிறார்.

*அனந்தபுரம் எனும் தலத்தின் ஆதித் திருத்தலமாம்*
*அனந்தனாம் அரவணையில் அறிதுயில் கொள் திருமாலைத்*
*தனந்தரும்ஓர் மரகதத்தாள் தன்னுடனே பொலிந்தானை*
*நனியருளும் வட்டாறு நாயகனை வணங்குவமே!*

இந்த ஆதிகேசவப் பெருமாள் தான் திருவனந்தபுரத்திற்கு மூலமானவர் என்பதால் உலகெங்கும் வியப்பித்த நிலையில் நின்றும் இருந்தும் கிடந்தும் என்ற அளவில் முப்பரிமாண சொரூபியாக ஆதி சேடன்மீது இத்திருவட்டாற்றிலும் பள்ளிகொண்டுள்ளான் பரந்தாமன் என்பதாகும்.

இப்படித் தத்துவார்த்தமாக வழிகாட்டி வழிநடத்தும் பரந்தாமனாம் பத்மநாபன் அனந்தன் மீது மட்டும் பள்ளி கொள்ளாமல் சர்வ யோகியாய் ஞானிகளின் இதயங்களிலும் பள்ளி கொண்டு படியளப்பதை மீனவர், நம்மாழ்வார் செய்த மங்களாசாசன எழுத்துள்ளும் பாயல் (பள்ளி) கொண்ட விதத்தைச் சிலாகிக்கும் விதமாகவே பாட்டாலே நம்மாழ்வார் பரவியே துதித்த பதி என்று சேவாதிகளாகிய நமக்குக் காட்டி மகிழ்கிறார்.

*மருள் ஒழி நீ மடநெஞ்சே! வாட்டாற்றான் அடிவணங்க*
*அருள் பெறுவார் அடியார் அடியனேற்கு*

என்பது நம்மாழ்வார் வாக்கு! இந்த நம் மாழ்வார் நற்றமிழில் ஓர் நுட்பம் உள்ளது. அதாவது அடியார்தம் அடியனேற்கு - என்றது தாசாதிதாசனாம் தமக்கு அருள் செய்ய சமயம்பார்த்திருந்து பேரருள் செய்ததாகத்தம் அனுபவத்தை நம்மாழ்வார் பதிவு செய்தார் என்பதால் சேவாதிகள் பரந்தாமனின் திருவருளுக்குக் காத்துக் கிடக்க வேண்டும்

என்பதாகவே மீனவர், இசைபெற நீர் இசை கொண்ட பரந்தாமன் தன்னுடைய அடிபரவி அனவரதம் வணங்குமினே எனக் கட்டளையிட்ட வண்ணம் திருவட்டாறு வணங்கியபின் திருவண்பரிசாரம் என்னும் திவ்ய தேசத்திற்கு மீனவர் நம்மை அழைத்துச் செல்ல, கமலவல்லி நாச்சியார் உடனாய திருவாழ் மார்பன் என்னும் பரந்தாமனைச் சேவிக்கின்றோம்.

பைந்தமிழ்க்குறள் போல் இத் திருவண்பரிசாரம் என்னும் தலத்து மூலவர் - திருக்குறளப்பன் என்னும் சிறப்புப் பெயருடன் கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் வீற்றிருந்து அருள்பாலிக்கின்றார். வாமன அவதார மகிமையால் குள்ளமாக வந்து குபேர அருள் பாலித்ததை நினைப்பிக்கும் விதமாகவே திருக்குறளப்பன் என்ற பெயர் பரந்தாமனுக்கு அமைந்தது எனலாம்.

நாகர் கோயில் அருகில் உள்ள இத்தலத்தை மக்கள் திருப்பதிசாரம் என்றே பெயரிட்டழைக்கின்றனர். இந்தத் தலத்தை நம்மாழ்வாரின் தாய் பிறந்த தலமாகக் கூறிச் சிறப்பிப்பர். இருப்பினும் எம்பெருமானாகிய பரந்தாமனுக்கு அன்புடையவர்கள் எங்கும் உள்ளது போல் இந்தத் திருவண்பரிசாரத்தும் உள்ளார்கள் என்ற நம்பிக்கையில் அடியாரோடு பரந்தாமன் வாழ்வதாக நம்மாழ்வார் கீழ்க்கண்டவாறு பாடுகிறார்.

*வருவார் செல்வார் வண்பரி சாரத் திருந்தஎன்*
*திருவாழ் மார்வற்கு என்திறம் சொல்லார் செய்வதென்!*
*உருவார் சக்கரம் சங்கு சுமந்து இங்கு உம்மோடு*
*ஒருமா குழல்வான் ஓர் அடியானும் உளன் என்றே!*

இப்பாடலில் நம்மாழ்வார் - தம்மைப் பெண்ணாகப் பாவித்துக் கொண்டு தமது கவலையைப் பரந்தாமனிடம் யாரும் போய்ச் சொல்ல முன்வர வில்லையே! அழகிய வண்பரிசாரம் என்ற ஊரில் வருவாரும் போவாருமாகப் பலர் இருந்தாலும் அவர்கள் யாவரும் அவரவர் காரியத்தையே கருதினாரே யன்றி என்னைக் கண்டு கொள்ளவில்லையே என ஏங்கித் தனித்திருந்தாலும், என்னைக் கண்டு கொள்ளவும் ஒருவன் உளன் என்றபடி இவன் என் அடியான் என

என்னோடு பரிபவம்பட்டு உழன்று நான் ஒருவன் உனக்காக உளன் என ஆறுதல் தரும் வண்பரிசாரமாக உள்ளதாய்ப் பாடினார்.

இதனை அப்படியே உள்வாங்கிப் பாடுவதாகவே மீனவனாரும், அடியார்தம் குருமா மணியான கோவிந்தன் திகழ்வண் பரிசாரம் வருவார் தமக்கு இங்கே வரம் தருவான் என்று பாடினார்.

இத்திருத்தலத் தத்துவார்த்தம் யாதெனில் ஆதிமூலம் பரம்பொருளான பரந்தாமன் தன் இதயத்திலிருந்து செல்வங்களை உலகிற்கு வாரிவழங்கும் திருவாழ் மார்பனாக உள்ளான் என்பது கருத்தாகும், இதில் பரந்தாமனின் வலப்புறத்தில் திருமகள் வீற்றிருக்கச் செல்வத்தை அருளினாலும் இடப்புற இதயத்திலிருந்து அருட்செல்வத்தை அருளுகிறான் என்பது கருத்து என மீனவர் கூறி விளக்கும் போது தான் திருப்பதிசாரம் என்ற பெயர் இத்தலத்திற்கு அமைந்ததன் பொருத்தத்தையும் உணர முடிந்தது. திருப்பதியில் அலர்மேலுமங்கை வலப்புறத்தே அமர்ந்தவராகவே உள்ளார். இங்ஙனம் திருமகளாம் சக்தி வலப்புறத் திருப்பதான காட்சியானது திருக்கல்யாண கோலக் காட்சியாய் மங்கலத்தை நினைப்பிப்பதாகும்.

சிவன் அர்த்த நாரியாகப்பார்வதியை இடப்பாகத்தே கொண்டிருந்தாலும் மாமதுரையில் சொக்கலிங்கர் சந்நிதிக்கு வலப்புறமாகவே அன்னை மீனாட்சி உள்ளதானகாட்சி அரிதான கல்யாண கோலக் காட்சியாகும் என்பதால் தான் உலகப் புகழ்பெற்ற தலைமைமிக்க சக்திபீடமாக மதுரை திகழ்வதாகக் கூறுவர்.

இந்த வகையில் ஆன்மாக்களுக்கான ஐசுவரியங்களை யெல்லாம் திருவாழ்மார்பனாய் வாரி வழங்கும் வண்மதிசாரம் வணங்கியதும் மீனவர் நம்மைப் பைந்தமிழ்ப் பாண்டி மண்டலத் திருத்தலங்கட்கு அழைத்துச் செல்ல முதலில் திருக் குறுங்குடி என்னும் திவ்யதேசம் தரிசித்துப் பேறு பெறுவதை அடுத்துத் தொடர்ச்சியாகக் காண்போமாக!

*(தொடரும்...)*

## அபிராமிப்பட்டர் காட்டும் அறநெறிகள்
### (இல.பழனியப்பன்)

### (1)

இறைவன் ஓர் பொம்மலாட்டக்காரன், பம்பரம் சுழல்வது போல் நமது வாழ்வையும் சுழற்றிக் கொண்டிருக்கிறான்.

சக்கரத்தின் முன் பக்கம் பின்னோக்கிப் போவது போலவும் பின்பக்கம் முன்னோக்கிப் போவது போலவும் ...... இந்த இயல்பு வாழ்வைக் கொடுத்த இறைவன் நாம் இவ்வுலகில் எப்படி வாழ வேண்டும் என்ற நெறிகளையும் தந்துள்ளான். அந்த ஒப்பற்ற இறைவன் தந்த உன்னத நெறிகள் மனித வாழ்க்கையோடு என்றும் அடிப்படையாகத் திகழ்ந்து நம்மை உய்ப்பிக்கும் என்பதில் யாருக்குமே சந்தேகம் வேண்டாம்.

வாழ்க்கையில் சோதனைகளைக் கொடுத்து நம்மைச் சாதனையின் சிகரத்திற்கே கொண்டு செல்லும் அந்த ஈசனை, சிவனை வணங்கி வாழ்வது மட்டும் போதாது; அவன் காட்டிய உயரிய நெறிகளை நாம் கட்டாயம் பின்பற்றுவதே சைவநெறி காக்கும் உன்னத வழிமுறையாகும். அந்த நெறிகளைப் பின்பற்றி வாழ்பவனையே வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுயரும் தெய்வமாக வள்ளுவப் பெருமான் பார்க்கிறார். மனித வாழ்வின் நிலையற்ற தன்மையை முன் நிறுத்தி நமது சைவ நெறி திருநீறு மூலம் நமக்கு விழிப்புணர்வு ஏற்படுத்துகிறது.

திருஞானசம்பந்த சுவாமிகள் சிவன் வணக்கத்தில் முக்தி தருவது நீறு சத்தியமாவது நீறு என்று கூறி அருந்தவமாவது நீறு என்றும் ஆணித்தரமாகச் சொல்கிறார். இதைத்தான் நீறில்லா நெற்றி பாழ் என்று நம்முன்னோர்கள் படம் பிடித்துக் காட்டுகிறார்கள். இப்படிப்பட்ட மனித வாழ்வின் நிலையற்ற தன்மையை, சைவ நெறி ஒன்றே உலகில் உறுதியாகக் கூறுகிறது. இதுயாரும் மறுக்க முடியாத பேருண்மை. அவ்வாறே அத்தகைய சைவநெறி காட்டும் மானிட வாழ்வு நெறிகளை அபிராமிபட்டர் கூறியவாறு பார்ப்போம்.

இந்த நீதிப் பாடல்கள் நமது பல்வேறு இலக்கியங்களில் தொடர்ந்து வலியுறுத்தப்பட்டுள்ளன. ஆனால் இவற்றை ஒரே பாடலில்

அபிராமிஅந்தாதி தந்த அபிராமிப்பட்டர் மிக அற்புதமாகத் தந்துள்ளார். முதலாவதாக, கல்வியையே முன்னுரிமை தந்து நம்மைத் திகைப்படைய வைக்கிறார். அதாவது கலையாத கல்வியைக் காட்டுகிறார். கலையாத கல்வி என்பது பரந்த பொருள் கொண்டதும் அது வாழ்நாள் முழுவதும் நாம் நமது செயல்பாட்டின் மூலம் தொடரவேண்டிய கல்வியைக் குறிக்கின்றது. ஆம் கற்றுக்கொள்வதற்கு ஓய்வு நாள் நமது இறுதிநாள் அன்று தானே. ஒவ்வொரு செயலிலும் ஒரு அனுபவம் ஒரு படிப்பினை உள்ளது; அதை ஞானத்தோடு பார்த்தால் மட்டுமே நமக்குத் தெரியும். இந்த ஞானமே ஆன்மிக வாழ்விற்கு உண்மையான விழிப்புணர்வு ஆகும்.

மொத்தத்தில் கல்வி என்பது ஒரு தொடர் கதை என்று இன்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவதை நமது முன்னோர்கள் அன்றே செயல்படுத்தியுள்ளார்கள். இத்தகைய கல்வியையே அபிராமிபட்டர் தனது பாடலில் கூறியுள்ளார். இறைவனின் அருள்பெற்ற தீர்க்கதரிசி அபிராமிபட்டர், நேரடியானவர் நேர்மையானவர்.

நிறைவோடு இறைவன் கொடுத்த உணவை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு இறுதிவரை வாழ்ந்தவர். நமது ஆன்மீகப் பசியைப் போக்கிய வள்ளல். வாழ்வின் அனுபவ வழியில் கற்க வேண்டிய கல்வியே வாழ்வியல் கல்வி. இந்தக் கல்வி இல்லாவிடில் மற்ற எந்தக் கல்விக்கும் பெருமை இல்லை. ஆகவே நாம் என்றும் கல்வியைத் தொடர்வோம். கல்வியைத் தொடர்வது. குறையாத வயது நமக்கு அடிப்படை வரமாக அது அமைய வேண்டும். ஆம் மனித வாழ்வு உள்பட எல்லா உயிரினங்களும் எத்தனை சவால்கள், சோதனை வந்தாலும் அதை எதிர்கொண்டு நீண்ட நாள் வாழ அதாவது இறைவன் நமக்குக் கொடுத்திருக்கும் வயது வரை வாழவே விரும்புகின்றன.

ஆம்; பிறப்பை நமக்கு அறிவுறுத்திய இறைவன் இறுதி நாளை நமக்கு ஏன் அறிவுறுத்தவில்லை? நாம் இங்கே சற்றுச் சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். நமக்கு முடிவு தெரிந்து விட்டால் செய்யக் கூடாதவை எல்லாம் உலகில் அரங்கேறி உலகம் கீழ்மையிலேயே நடமாடும்.

மனித நாகரிகம் பண்பாடு எல்லாமே கேள்விக்குறியாகிவிடும். ஏன்

இன்னும் சொல்லப் போனால் மனித சக்தி அருகி மிருக சக்தியே உலகில் கொடி கட்டிப் பறக்கும். அதன் தாக்கம் மனித நேயம் மனித உறவு மனச்சாட்சி எல்லாவற்றையும் ஒரு நொடியில் அழித்து விடும். அப்படிப்பட்ட நிலை வராமல் மனிதனாக வாழ இறை ஆற்றலை உணர்ந்து வாழ நமக்குக் குறையாத வயது கட்டாயம் தேவைதானே.

அடுத்து மூன்றாவதாக (3)

கபடு வாராத நட்பு பற்றிக் குறிப்பிடுகிறார்

ஆம்; கல்வியும் வயதும் தானே கபடு வராத நட்பை உறுதி செய்யும். நட்பு என்பது நல்லுறவை முன்னிறுத்தியே இங்கே பேசப்படுகிறது. கபடு என்பது சூழ்ச்சி; ஆம் உள்ளே ஒன்று வெளியே ஒன்று என்று உறவாடும் நிலையை அது குறிக்கிறது.

இந்த நிலையைத்தான் அருட்பிரகாச வள்ளலார் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும் என்று இறைவனிடமே வேண்டுகிறார். இந்தக் கபடு வாராத நட்பு என்பது வாழ்க்கையின் எல்லாப் பரிணாமங்களிலும் எதிரொலிக்க வேண்டிய ஒன்றாகும். பொதுவாக நட்பு என்பதை நண்பர்களை வைத்தே நாம் பயன்படுத்துகிறோம். ஆனால் இந்த நட்பு தொப்புள்கொடி உறவு என்பதே அடிப்படை உண்மையாகும். ஆம் அன்னை குழந்தை உறவில் உருவாகும் இந்த நட்பு பின்னர் அப்பா, அண்ணன், தங்கை அக்கா மற்ற உறவினர்களுடன் தொடர்கிறது. ஆழமாகப்பார்த்தால் உறவு என்னும் நட்பு உளவியல் ரீதியாக மனித வாழ்வின் அடிப்படைக் கோட்பாடாகும். அது உறவின் ஆழத்தை விளக்குகிறது. ஆம்; ஆழமான உறவே உயர் நட்பு? ஆம்; வாழ்க்கையை இயல்பாக நாம் எதிர்கொள்ள அது உதவும். இந்த உறவில் கபடு இருந்தால் என்ன ஆவது?

சூதும் வாதும் வேதனை தரும் என்ற பொன்மொழியும் இதன் தாக்கமே! இந்தக் கபடு வாராத நட்பின் விளைவாக அடுத்துத் தொடர்ந்து வருபவை கன்றாத வளமை(4) மற்றும் குன்றாத இளமை (5) ஆகியவை ஆகும். பொதுவாக எல்லோருமே வாழ்வில் வளமையையே விரும்புகிறோம். வளமை என்ற ஒரு சொல்லில் எல்லாப் பொருளும் அடங்கியிருக்கிறது. ஆம்; கன்றாத வளமை

என்றும் குறையாத இளமை அனைத்திலும் வளமை; அதுவே வாழ்வினில் என்றும் இனிமை. அந்த வளமைக்கு அடிப்படை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. அதுதான் குறையாத இளமை. இளமை என்பது இங்கே உள்ளத்தைக்குறிக்கிறது. ஆம்; உடல் வயதுக்கேற்ற தோற்றத்தில் தேய்மானம் ஏற்படும். முதுமை அடைவது இயற்கை. அந்த முதுமையை மனதில் இளமையாக உள்ளவர்களே எதிர் கொள்ள முடியும். மனதை இளமையாக வைத்திருப்பதைப்பற்றி இன்று ஆன்மிகமும், உளவியலும், மெய்ப்பொருளும் பேசுகின்றன. இதை அன்றே நமக்காக இறைவனிடம் வேண்டியவர் அபிராமிபட்டர் மட்டுமே. அவரது எண்ண ஓட்டங்கள் நம்மை எங்கோ அழைத்துச் செல்கின்றன. இளம் வயதில் நடுத்தர வயதில் அபிராமிபட்டரின் பாடல் திருமுருக கிருபானந்தவாரியார் உரையில் கேட்ட போது மனது என்னைப் பொறுத்தவரை ஒருநிலைப்பட இன்று வரை அது தொடர்வதை தெய்வீகப் பேறாகக் கருதுகிறேன். ஆனால் இன்றைய எந்திர உலகில் எத்தனை பேர் மன இளமையைப் பற்றிச் சிந்திக்கிறார்கள் என்பது சந்தேகமே. ஆனால் அன்றைய நாட்களை விட இன்றைய நாள் வாழ்விலேயே மன இளமையின் மகத்துவம் மனித குலத்திற்கு அதிகம் தேவைப்படுகிறது என்பதைக் கட்டாயம் நாம் ஒவ்வொருவரும் மனதில் கொள்ள வேண்டும். இந்த இறைநீதிகள் ஒவ்வொன்றும் சங்கிலித் தொடர் போலவே அமைந்துள்ளன. இது குறிப்பிட்டுக் கவனத்தில் கொள்ள வேண்டிய ஒன்றாகும். வளமையும் இளமையும் இருந்தால் தானே கழுபிணி இலாத உடல் நமக்கு வாய்க்கும். மனித குல வாழ்வில் அன்றும் இன்றும் ஏன் இனி என்றும் வாழ்வின் சவாலாக இருப்பது நோய்கள் தானே. உடல் நோயும் நம்மை வருத்துகிறது. மன நோயும் நம்மை வருத்துகிறது. இதன் தாக்கம் எதிரொலிப்பது உடல் மூலம். ஆகவே நோய் இல்லாத உடலை நாம் பெறுவதே உண்மையான சொர்க்கம்; கண்ணுக்கு தானே தெரிந்த சொர்க்கம் ஆகும்.

சலிப்பு என்ற சொல் தமிழில் தனித்தன்மை வாய்ந்த சொல். அதற்கு இணையாக விரக்தி என்ற சொல்லையும் பயன்படுத்தலாம். சலிப்பு மனதில் ஏற்படும் ஒரு தனி உணர்வு. அந்த உணர்வு அமைவது தெய்வீக நிலையே. இந்த உணர்வுக்கு மாற்று அவ்வளவு எளிதாக யாருக்கும் வந்துவிடாது. மற்றொரு வழியில் சொல்வதென்றால்

எதையும் தாங்கும் இதயம் தரும் பொறுமை உணர்வே சலிப்பு இல்லாத மனமாகும். அப்படிச் சலியாத மனத்தை நமக்குத் தர இறைவன் தயாராகவே உள்ளார். நாம் அவனின் பிள்ளைகள். ஆனால் நாம் கேட்பதில்லையே! பின்பு எப்படி அது நமக்குக் கிடைக்கும்? சற்று சிந்தியுங்கள். சலியாத மனம் இருந்தால் மட்டுமே அன்பு அகலாத மனைவி தளராத சந்தானம் ஆகியவை உறுதியாகக் கிடைக்கும். எந்த நிலையிலும் எந்தக் காலக் கட்டத்திலும் அன்பு அகலாத மனைவி நமக்கு அமைந்துவிட்டால் அதன் வழி தவறாத சந்தானமாகிய மகப்பேறும் அமைந்து விட்டால் வாழ்க்கையில் வேறு என்ன பேறு வேண்டும்.

நினைத்துப் பாருங்கள் மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம் என்ற கவியரசர் கண்ணதாசனின் பாடல் அபிராமிபட்டரின் தாக்கமே! வள்ளுவர் மனை மாட்சி என்றும் வாழ்க்கைத் துணை என்றும் போற்றுகிறார். இன்று நாம் ஆண், பெண், சமத்துவம் பற்றி எல்லோரும் பேசுகிறோம். அன்றே வள்ளுவர் வாழ்க்கைத் துணை என்று மனைவிக்குப் பட்டம் கொடுத்துச் சமத்துவம் கொடுத்துள்ள பாங்கு வேறு எந்த நாட்டில் எந்த இலக்கியத்தில் உள்ளது. எவ்வளவு பெரிய பதவியில் இருந்தாலும் குடும்பத்தை மனையில் மேலாண்மை செய்வதாலேயே மனைவி என்று ஆனாள். அந்த மனைவியிடம் அன்பு அகலாது அதாவது எந்த நிலையிலும் மாறாது இறுதி வரை இருந்தால் தானே குடும்ப வாழ்வு சிறக்கும்.

அன்பு அகலாத மனைவி வழியாகக் கணவன் மட்டுமல்ல; அந்தக் குடும்பத்தில் உள்ள அனைவரும் அவளது அன்பால் பெருமை அடைகிறார்கள் என்பதே கண்கண்ட உண்மை. மனைவி ஆகிய பெண்ணின் இன்றைய நிலையை எண்ணிப்பார்க்கும் போது நமக்கு ஆழ்ந்த கவலையே மிஞ்சுகிறது. என்ன செய்வது பெண்களின் நிலை இன்றைக்கும் பரிதாபத்திற்குரிய ஒன்றாகவே உள்ளது. தமிழ்த் தென்றல் திரு. வி.க. பெண்களை முன்னிலைப்படுத்த வேண்டுகிறார்.

பெண் வழிதானே நாம் இந்த உலகத்திற்கு வந்தோம். அவளை முன்னிலைப்படுத்த என்ன தயக்கம்? உலக வளர்ச்சியை மனித குலப்

பிறப்பைப் பெண் மூலம் தானே அலகிலா விளையாட்டுடைய தலைவன் நடத்திக் கொண்டிருக்கிறான். பெண்கள் இல்லாத உலக வளர்ச்சியை நம்மாலே நினைத்துப் பார்க்க முடியுமா? அந்தப் பெண்ணை அங்கீகாரம் செய்தால் எந்நாளும் நாம் அன்பு அகலாதவர்களாக வலம்வர முடியும் அல்லவா. அகலாத மனைவி தரும் மகப்பேறு ஆகிய சந்தானத்தைத் தவறாத சந்தானம் என்கிறார் அபிராமிபட்டர். ஆம் உண்மையில் மகப்பேறு எல்லாப் பேறுகளிலும் உயர்ந்த பேறு. அந்தப் பேற்றைத் தரும் அன்னை என்றும் போற்றுதலுக்குரியவள் தானே? அன்பையும் மகப்பேறையும் அடுத்தடுத்துத் தந்து நம்மை அகம்குளிர வைக்கிறார் அபிராமிபட்டர்.

இத்தனை உண்மையான செல்வங்கள் வந்த பின்னர் நமக்கு இயற்கையாகவே கீர்த்தியாகிய புகழ் கட்டாயம் கிடைக்கும். அந்தக் கீர்த்தியை, புகழை தளரவிடாத் தன்மையை நாம் என்றும் கட்டிக் காக்க வேண்டும். கீர்த்தி என்பது நீடித்த புகழைக் குறிக்கும். நமது வாழும் காலத்திற்குப் பின்னரும் எந்நாளும் நமக்குப் பெருமை சேர்ப்பதே கீர்த்தியாகும். பொதுவாக உலகில் புகழை விரும்பாதவர்கள் யாருமே இல்லை. எல்லா நிலையிலும் யார்போல இவர் என்று பேர் சொல்ல வேண்டும் என்பதே உலகளாவிய செயலாக உள்ளது. தாழாத கீர்த்தி என்பது உயர்வான புகழைக் குறிக்கிறது.

பொதுவாகப் புகழ்பெறப் பல வழிகள் உள்ளன. எந்த விதத்திலாவது புகழ்பெறுவது எளிது. ஆனால் அது நிலையானது அல்ல; நீடித்து நிற்காது. இதன் மூலம் வேறு ஒரு கோணத்தில் மற்றவர்களுக்குத் தொண்டு செய்து கீர்த்தியாகிய புகழைப் பெற வேண்டும் என்பதும் இங்கு வலியுறுத்தப்பட்டுள்ளது. கீர்த்தி உள்ளவரே மனிதர்கள். உண்மையான மனிதத் தன்மை உடைய மனிதர்கள் என்று ஒரு காலத்தில் நம்பப்பட்டது. ஆதலால் குறிப்பாக இன்றளவும் சிவகங்கை, புதுக்கோட்டை மாவட்டங்களில் திருமணம் பேசும் போது மனிதர் வீடு என்று பார்த்து முடிக்கிறார்கள். ஆகவே கீர்த்தியாகிய நிலைத்த புகழுக்காக ஏங்குவதை விட அதை அடையும் அற்புதப் பொது நோக்கு தியாக வழிமுறைகளைப் பின்பற்றுவது நம் எல்லோருக்கும் நன்மை தரும் கீர்த்தியைத் தொடர்வது மாறாத வார்த்தை. ஆம் புகழ்பெற்ற பின்

நம்மிடையே பலர் ஏறிவந்த ஏணியை எட்டி உதைத்து விட்டு வந்த பாதையை மறந்துவிட்டு விருப்பம் போல நடந்து கொள்கிறோம். இது தான் ஒத்துக்கொண்டவைகளை எந் நிலையிலும் மனப்பூர்வமாக ஏற்று முடிக்க வேண்டும் என்று மாறாத வார்த்தைகளை வலியுறுத்துகிறது. சொன்ன வார்த்தையைச் சத்திய நெறியாகப் பின்பற்ற வேண்டும். அதில் சிறிதளவும் மாற்றம் கூடாது என்பதே இதன் கருத்து. ஆனால் சிலர் வசதி வந்த பின் தன்னோக்கு, தன்னலச் சிந்தனையின் விளைவாக மாறிவிடுகிறார்கள். வார்த்தை மாறாத வாழ்வினை நமது இலக்கியங்கள் நமக்கு நீதியாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன. மொத்தத்தில் வார்த்தை மாறுவது மீறுவது மிகத் தவறான நீதியாகவே இன்றளவும் பார்க்கப்படுகிறது. இந்த உறுதி இருந்தால் மட்டுமே அடுத்த நீதியான தடைகள் வராத கொடைகள் முழுமை பெறும், சிறப்புப் பெறும். ஆம் இது நடைமுறை காட்டும் உண்மை. கொடை என்பது எதையும் பிரதிபலனாக எதிர்பாராமல் அடுத்தவர்களுக்கு நாம் வழங்குவதாகும். கொடை உள்ளம் என்பது பரந்த உள்ளம். மிகமிக உயர்ந்த உள்ளம், கொடையால் இன்றும் நம் நாட்டில் பலர் வாழ்ந்து கொண்டு நம் நினைவில் நிற்கிறார்கள். பாரி வள்ளல் மற்ற உயிரினமான முல்லைக் கொடிக்கே தன் தேரை அது படர்வதற்காக வழங்கிய வள்ளல். வள்ளல் குமணனின் செயல்பாடுகள் நம் வாழ் நாள் முழுவதும் நம்மை இறுதிவரை சிந்திக்க வைக்கும். கர்ணனும் வரலாற்றில் கொடையால் புகழ்பெற்றவனே. தமிழில் கடை எழு வள்ளல்கள் வாழ்ந்து நமது நாட்டைத் தெய்வீகமாக மாற்றியவர்கள் என்பதை மறக்கலாமா? தடைகள் வராத கொடை என்பது மிகமிகப் பொருள் வாய்ந்தது. கலைவாணர் என்.எஸ்.கே. அவர்கள் வறுமையில் வாடிய போதும் தன் வீட்டிற்கு வந்தவர்களின் தேவையை அறிந்து தன்னிடம் இருந்த ஒரே செல்வமான வெள்ளி விளக்கை வழங்கியது நம் கண்களில் நீரை வரவழைக்கவில்லையா. நினைத்துப் பாருங்கள்! இயலாமை வந்தாலும் இயன்றதைச் செய்வதே உண்மையான தடைகள் வராத கொடையாகும். அடுத்த மூன்று நீதிநெறிகளான தொலையாத நிதியம் கோணாத கோல் துன்பம் இல்லாத வாழ்வு ஆகிய மூன்றும் ஒரு நாட்டின் செழுமைக்கு அடிப்படையான நிதி ஆதாரங்கள், உறுதியான அரசாங்கம் அதன் வழி

மக்களுக்குத் துன்பம் இல்லாத வாழ்வு ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். ஒரு நாட்டின் செல்வம் அதன் நிதி ஆதாரத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. இன்று உலகளாவிய அளவில் பேசப்படும் பொருளாதாரக் கொள்கை கோட்பாடுகள் அன்றே இருந்துள்ளது என்பதைத் தொலையாத நிதியம் மூலம் நாம் அறிந்து வியப்படைகிறோம். தொலையாத நிதியம் கடன் சுமை இல்லாத நிதிநிலை செல்வ வளங்களை முன்னிறுத்துகிறது. கடன் சுமை இல்லாத நாடே தலை நிமிர்ந்து உலகில் வலம் வர முடியும். கடன் பட்டார் நெஞ்சம் போல என்று தனிப்பட்டவர்களின் கடன் சுமையை அந்த நாட்களில் சொல்வது உண்டு. ஆனால் அது இன்று கடன் கொடுத்தார் நெஞ்சம் போல் மாறிவிட்டது. கடனைத் திருப்பிக் கொடுப்பதைக் கண்ணியமாகக் கருதிய நிலை இன்று மாறி விட்டது. கடன் என்ற சொல்லே திருப்பிக் கொடுப்பதையே குறிக்கும். இன்று அதன் பொருளே மாறிவிட்ட பரிதாபநிலையே உள்ளது. தொலையாத நிதியமே ஒரு நாட்டின் அனைத்து மூலதனத்திற்குமே அடிப்படையாகத் திகழ்கிறது.

இந்த மூலதனம் ஆட்டம் கண்டால் அந்த அரசே ஆட்டம் கண்டுவிடும். அதன் விளைவாகக் கோணாத கோல் வளைந்து விடும். நாட்டின் ஒற்றுமை உறுதிப் பாட்டிற்குச் சோதனைகள் வந்துவிடும். அடுத்த நாட்டுக்காரர்கள் நம்மீது ஆதிக்கம் செலுத்த முனைவதால் சுதந்திர வாழ்வு பாதிக்கப்படும். அத்தகைய நிலையே துன்பமான வாழ்விற்கு வழி வகுத்துத் துன்பம் இல்லாத வாழ்வை மக்கள் மத்தியில் கேள்விக்குறியாக்கிவிடும். ஆகவே இந்த மூன்றும் சிறப்பாக அமைய அன்னை அபிராமியிடம் வேண்டிக் கொள்கிறார் அபிராமிபட்டர். இது நமக்காக நம் வாழ்விற்காகப் பொது வேண்டுகோள். இந்த வேண்டுகோளை அன்னையின் பாதத்தில் அன்புடன் வைத்து வணங்கியுள்ளார். இந்தப் பாடல் முழுவதையும் பார்க்கும் போது அபிராமிபட்டர் ஒரு தெய்வீக சித்தர் என்பதே தெளிவாகிறது. அவர் வழி நாமும் இந்த அனைத்து நீதி நெறி வேண்டுதல்களை வாழ்வில் என்றும் கடைப்பிடித்து உய்வோம்.

இவை சாதி, சமயப்பேதங்கள் கடந்த மனிதருக்கு வேண்டுதல்கள் என்பதே உலகம் உணரவேண்டிய சிறப்புச் செய்தியாகும்.

# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## அவையறிதல்

(மன்னனது அவை இயல்பை அறிதல்)

**1. அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.**

அவையறிந்து - மன்னனோடு உள்ள அவையினை அறிந்து; ஆராய்ந்து - சொல்லின் பயனை ஆராய்ந்து; சொல்லுக - சொல்ல வேண்டும்; சொல்லின் தொகையறிந்த - சொற்களின் தொகுப்பினை அறிந்த; தூய்மையவர் - தூய அறிவினை உடைய அமைச்சர்.

சொற்களின் தொகுப்பினை அறிந்த தூய அறிவினை உடைய அமைச்சர், மன்னனோடு உள்ள அவையினை அறிந்து சொல்லின் பயனை ஆராய்ந்து சொல்ல வேண்டும்.

**2. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.**

இடை தெரிந்து - அவையின் நிலையினைத் தெரிந்து; நன்குணர்ந்து - சொல்லினை நன்கு உணர்ந்து; சொல்லுக - சொல்ல வேண்டும்; சொல்லின் நடைதெரிந்த - சொல்லின் பொருள் இயல்பைத் தெரிந்த; நன்மையவர் - நன்மை உடையவர்.

சொல்லின் பொருள் இயல்பைத் தெரிந்த நன்மை உடையவர் அவையின் நிலையினைத் தெரிந்து சொல்லினை நன்கு உணர்ந்து சொல்ல வேண்டும்.

**3. அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல்.**

அவையறியார் - அவையினது தன்மையை அறியாமல்; சொல்லல் மேற்கொள்பவர் - ஒன்றைச் சொல்ல முற்படுபவர்; சொல்லின் வகையறியார் - சொல்லினது வகைமையை அறியாதவர்; வல்லதூஉம் இல் - சொல்லும் வல்லமையும் இல்லாதவர்.

அவையினது தன்மையை அறியாமல் ஒன்றைச் சொல்ல முற்படுபவர் சொல்லினது வகைமையை அறியாதவர்; சொல்லும் வல்லமையும் இல்லாதவர்.

சொல்லல் - தொழிற்பெயர்

வல்லதூஉம் - இன்னிசை அளபெடை

**4. ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்**
**வான்சுதை வண்ணம் கொளல்.**

ஒளியார்முன் - அறிவினால் ஒளிமிக்கவர் முன்னர்; ஒள்ளியர் ஆதல் - அறிவுடையவராதல் வேண்டும்; வெளியார் முன் - அறிவில்லாதவர் முன்னே; வான் சுதை - வெண்மையான சுதைக் கட்டியின்; வண்ணம் கொளல் - வெண்மை போன்ற தன்மையைக் கொள்ள வேண்டும்.

அறிவினால் ஒளிமிக்கவர் முன்னர் தானும் அறிவுடையராதல் வேண்டும்; அறிவில்லாதவர் முன்னே வெண்மையான சுதைக் கட்டியின் தன்மையைக் கொள்ள வேண்டும்.

அறிஞர் முன்னே அறிஞனாகவும் அறிவில்லாதார் முன்னே அறிவில்லாதவனாகவும் நடக்க வேண்டும்.

**5. நன்று என்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்**
**முந்து கிளவாச் செறிவு.**

நன்று என்றவற்றுள்ளும் - நன்று எனச் சிறப்பிக்கப் பெறும் பண்புகள் எல்லாவற்றுள்ளும்; நன்றே - நன்று என்று கருதப்பெறுவது; முதுவருள் - தன்னைவிடச் சிறந்தவர்களிடையே; முந்துகிளவா - முந்திக்கொண்டு சொல்லாத; செறிவு - அடக்கம்.

நன்று எனச் சிறப்பிக்கப் பெறும் பண்புகள் எல்லாவற்றுள்ளும் நன்று எனக்கருதப் பெறுவது தன்னைவிடச் சிறந்தவர்களிடையே முந்திக்கொண்டு எதனையும் சொல்லாத அடக்கம் ஆகும்.

நன்றே - ஏ தேற்றேகாரம்; பிரிநிலையும் ஆம்

**6. ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்**
**ஏற்றுஉணர்வார் முன்னர் இழுக்கு.**

ஆற்றின் - நல்ல நெறியில் ; நிலை தளர்ந்தற்றே - நிற்றலிலிருந்து தளர்ந்து விடுவது போலாகும்; வியன்புலம் - அகன்ற புலமையை; ஏற்று உணர்வார் முன்னர் - பெற்று உணர்ந்தவர்களின் முன்னர்; இழுக்கு - சொல்லினால் இழுக்குப் படுதல்.

அகன்ற புலமையைப் பெற்று உணர்ந்தவர்களின் முன்னர் சொல்லினால் இழுக்குப்படுதல் என்பது நல்ல நெறியில் நிற்றலில் இருந்து தளர்ந்து விடுவது போல ஆகும்.

**7. கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடுஅறச்**
**சொல்தெரிதல் வல்லார் அகத்து.**

கற்றறிந்தார் கல்வி - பல நூல்களைக் கற்று அறிந்தவருடைய கல்வி; விளங்கும் - விளக்கம் பெறும்; கசடு அற - குற்றமில்லாது; சொல் தெரிதல் - சொற்களை ஆராய்தல்; வல்லார் அகத்து - வல்லவருடைய அவையின்கண்.

குற்றமில்லாது சொற்களை ஆராய்தலில் வல்லவருடைய அவையின் கண் பல நூல்களைக் கற்று அறிந்தவருடைய கல்வி விளக்கம் பெறும்.

**8. உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்**
**பாத்தியுள் நீர்சொரிந் தற்று.**

உணர்வது உடையார் முன் - சொல்லின் பொருளைத் தானே உணரவல்ல அறிவுடையவர் முன்; சொல்லல் - ஒன்றைச் சொல்லுதல்; வளர்வதன் பாத்தியுள் - பயிர் வளர்கின்ற பாத்தியில்; நீர் சொரிந்தற்று - தண்ணீர் ஊற்றுவது போல் ஆகும்.

சொல்லின் பொருளைத் தானே உணரவல்ல அறிவுடையவர் முன் ஒன்றைச் சொல்லுதல் பயிர் வளர்கின்ற பாத்தியில் அப்பயிர் வளர்வதற்காகத் தண்ணீர் ஊற்றுவது போல் ஆகும்.

இயல்பாக வளரும் பயிருக்கு நீர் ஊற்றுவதால் அது நன்கு வளரும். அதுபோல் இயல்பான உணர்வுடையார் முன் சொல்லுவது அவையில் உள்ளோருக்கு மேலும் பயன்தரும்.

சொல்லல் - தொழிற்பெயர்

**9. புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்**
**நன்கு செலச் சொல்லு வார்.**

புல்லவையுள் - கல்வி அறிவில்லாதவர்களின் அவையில்; பொச்சாந்தும் - மறந்தும்; சொல்லற்க - அவற்றைச் சொல்லக் கூடாது; நல்லவையுள் - கற்றறிந்தோர் அவையில்; நன்குசெலச் சொல்லுவார் - அவர்மனம் கொள்ளும்படி சொல்லுபவர்.

கற்றறிந்தோர் அவையில் அவர்மனம் கொள்ளும்படி சொல்லுபவர் கல்வி அறிவில்லாதவர்களின் அவையில் மறந்தும் அவற்றைச் சொல்லக் கூடாது.

**10. அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தம்கணத்தர்**
**அல்லார்முன் கோட்டி கொளல்.**

அங்கணத்துள் உக்க - முற்றத்தின் கண் சிதறிய; அமிழ்தற்றால் - அமிழ்தத்தைப் போன்றது; தம்கணத்தர் அல்லார்முன் - கற்றறிந்த தம் கூட்டத்தவர் அல்லாதவர் முன்; கோட்டி கொளல் - அவையில் சொல்லுதல்.

கற்றறிந்த தம் கூட்டத்தவர் அல்லாதவர் முன் அவையாக எண்ணிச் சொல்லுதல் முற்றத்தின்கண் சிதறிய அமிழ்தத்தைப் போன்றது.

முற்றத்தில் சிதறிய அமிழ்தம் பயன்படாதது போல் கல்லாதார் அவையில் சொல்வது பயனற்றது.

*(தொடரும்...)*

## நைகரம் இல்லா அன்பின் நங்கை

(ம.கார்மேகம்)

கணமங்கலம் என்னும் ஊரில் வாழ்ந்த வேளாண்குலத் தலைமை கொண்டவர் தாயநாயனார். தாயனார் என்பது அவர்தம் பெயர் செஞ்சடை வேதியர்க் கென்று செந்நெல் அமுதும் செங்கீரையும் மாவடுவும் கொண்டு வந்து அமுது செய்விக்கும் வழக்கம் கொண்டிருந்தவர். இன்னல் வந்தபோதும் வறுமை வந்தபோதும் இச்செயலில் இருந்து அவர் வழுவவில்லை. கூலிக்கு நெல் அறுத்து அதனால் அமுதாக்கி வந்தார். அதையும் மாற்றினார் மால் அயனுக்கு அரியவராகிய சிவபெருமான்.

உணவுப் பொருள் கிடைக்காத காலத்தில் மனைத் தோட்டத்தில் சென்று இலைகளைப் பறித்து வந்து மனைவியிடம் கொடுத்துச் சமைத்து உண்டு திருப்பணியும் செய்து வந்தார். அந்த நிலையில் தான் தாயனாரின் மனைவியை நைகரம் இல்லா அன்பின் நங்கை என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார். வீட்டின் புறத்தேயிருந்த இலைகளும் அழிந்து விட்டன. வடநெடு வானமீன் அனையவராகிய மனைவியார் தண்ணீர் வார்க்க அதனையே அமுதாகக் கொண்டார் தாயனார்.

ஒருநாள் முதல்வனாராகிய சிவபெருமானுக்கு அமுது செய்விக்க வேண்டிச் செந்நெல் அரிசி, மாவடு, மென்கீரை அனைத்தையும் கொண்டு கூடையில் சுமந்து சென்றார் தாயனார். அவரைத் தொடர்ந்து பின்னே சென்ற மனைவியார் ஆன்பெற்ற அஞ்சும் ஏந்திக் கொண்டு சென்றார். (பால், தயிர், நெய், கோசலம், கோமயம்) அவ்வாறு செல்லும் போது தாயனார் பட்டினியால் உடல் புலர்ந்து கால் தளர்ந்து வருந்தி வீழ்ந்தார். வீழும்போது கூட அவருடைய மனைவியார் மட்கலம் மூடிய கையினால் தாயனாரை அணைத்து நின்றார். இருப்பினும் தாயனார் கொண்டு வந்த அமுது அனைத்தும் நிலப்பிளவில் சிந்தி விழுந்து விட்டன. ஆண்டவன் அமுது செய்து அருளப் பெற்றிலேன்; என்ன செய்வேன் என்று கருதி நின்ற தாயனார் அரிவாளை எடுத்துத் தன் கழுத்தினை அரிவதற்கு முற்பட்டார். அப்போது அவர்கையை மாற்றுதற்கு நினைத்த சிவபெருமான் கையும் மாவடு கடிக்கும் போது உண்டாகும் விடேல் விடேல் என்ற ஓசையும் நிலப் பிளவிலிருந்து ஒருசேர எழுந்தன. அரிவாள் பற்றிய கையினை இறைவன் கை பற்றியது. இறைவன் கருணை புரிந்தான்; புரிசடைப் புராணனைப் போற்றி செய்தார் அரிவாள் தாய நாயனார். இறைவன் இடப வாகனனாய்த் தோன்றி நன்னுதலுடன் என்றும் நம் உலகில் வாழ்வாய் என்று அருள் புரிந்தான்.

இப்புராணத்தில் வரும் அரிவாள் தாய நாயனாரின் தொண்டுக்குத் துணை நின்றவர் அவர்தம் மனைவியார்; அதனால்தான் நைகரம் இல்லா அன்பின் நங்கை என்று சேக்கிழார் பாராட்டுகிறார். வறுமை வந்த போதும் கணவரின் தொண்டில் பங்கெடுத்து ஆன் அஞ்சும் ஏந்திச் சென்றவர் நாயனாரின் துணைவியார். அதனால் இறைவன் நன்னுதலுடன் என்றும் நம் உலகில் வாழ்வாய் என அருள் புரிந்ததைக் காண முடிகிறது. ஆயினும் தாயனார் விழவிருந்த நேரத்தில் மட்கல மூடுகையால் காதலால் கணவரை அணைத்துக் காக்க முற்பட்ட செயல் சிறப்பாகக் காட்டப் பெறுகிறது. வெளிப்படையாகத் தாயனாரின் மனைவியின் சிறப்புக் கூறப்படாவிட்டாலும் குறிப்பாகச் சமைத்துக் கொடுப்பதும் கணவரைப் பேணுவதும் ஆன் அஞ்சு ஏந்திச் செல்வதும், கணவர் விழ நேர்ந்த போது காக்க முற்பட்டதும் சொல்லப் பெறுகின்றன. அதனால் தான் இறைவன் அருள் அவருக்கும் கிட்டியது வறுமையின் வருத்தம் இன்றிப் பணியாற்றியதால் நைகரம் இல்லா நங்கை இறைவன் அருள் பெற்றார் எனலாம்.

## திருவிளையாடற்புராணம்

### மண் சுமந்தது

வையையாற்றின் வெள்ளப் பெரும் பரப்பிலே அகப்பட்டு மதுரை மூதூர் பெரிதும் துன்பம் அடைவதைக் கண்டான் பாண்டியன் அரிமர்த்தனன். உடனே, தனது மந்திரிகளை அழைத்தான். நீங்கள் சென்று வையையாற்றங்கரையைக் கட்டி வெள்ளத்தின் வேகத்தையும் போக்கையும் மட்டுப்படுத்தி வாருங்கள், என்று ஆணையிட்டான். அமைச்சரும், அப்படியே நன்று என்று சொல்லித் தொழுது சென்றனர். பலவகைப்பட்ட குடிகளைக் குறிப்பிட்டு, பெயர்களை எழுதிக்கொண்டனர். எல்லை கோலிய பின்னர் அடைக்க வேண்டிய பங்குகளைக் குறிப்பிட்டு அவரவர்ப் ங்குகளை அடையுங்கள், என்று பறைசாற்றி யழைத்தனர். வீட்டுக்கொரு கூலியாளாக வந்தவர்களை யெல்லாம் ஓரிடத்திலே கூட்டி, அவரவர் எல்லைக்குட்பட்ட பகுதிகளை விரைவாக அடைத்து விடுங்கள் என்று ஆணையிட்டு அவரவர்களிடத்திற்கு அவரவர்களைப் போகச் சொல்லினர்.

அதுசமயம் வையையாற்றின் கரையிலே மண் வெட்டியாளரும், கூடைக்காரரும், மரங்கள் சுமந்து வருபவர்களும், தழைகள் வைக்கோல் எடுத்து வருவோரும் வந்து மண்டினர். உடைபட்ட கரையோரங்களிலே மரங்களைக் கொண்டு நிறுத்தினர்; வைக்கோல் பிரியைக் கொண்டு மரத்தடியில் கிடத்தினர்; தாழைகளிட்டு நிரப்பினர்; மண்ணை வெட்டி எடுத்துச்சென்று விரைவாகக் கொட்டி நிரப்பினர். வையை அன்னையை வேண்டிக்கொண்டு மண்ணை வெட்டினர். சிலர் பறையடித்தனர்; சிலர் குரவையிட்டு ஆடினர்; சிலர் வேலை செய்வோரை அதட்டித் துரிதப்படுத்தினர். இப்படியாக நகர மாந்தர் சார்பாகப் பலதிறப்பட்ட கூலியாட்கள் வந்து அவரவருக்கு உற்ற அளவு முறைப்படி தொழில் புரிந்தனர்.

மதுரையம்பதியின் தென்கிழக்குத் திசையிலே வந்தி என்ற பெயருடைய கிழவி இருந்தாள். அவள் ஆயிரம் பிறைகண்டவள்; கூனுடையவள்; நரைதிரை மூப்புக் கொண்ட பெரியவள். சிவனடியார்களைக் காட்டிலும் சிறந்த தவமுடையவள். அவள் சுவையான பிட்டு ஆக்கி விற்றுப் பிழைக்கும் பாங்கினள். உற்றாரோ

உறவினரோ எவருமற்ற தனியாள். ஒவ்வொரு நாளும் தான் அவித்த பிட்டை ஆலவாய்ச் சொக்கநாதருக்கு நிவேதனம் செய்து பின்பே விற்பனை செய்வாள். தனக்கென்று விடப்பட்ட பகுதியை அடைப்பதற்குக் கூலியாள் கிடைக்காமல் பெரிதும் வருந்திக்கொண்டிருந்தாள் வந்தி. மன்னன் தண்டனை தந்தால் நான் என்ன செய்வது? என்று உளம் கலங்கி சோமசுந்தரப் பெருமானை நினைத்து, ஆலவாய் அண்ணலே! பிட்டு விற்றுப் பிழைக்கும் ஏழை நான்; மன்னவன் ஆணை எனக்குத் துன்பம் தருகிறது. நானோ யாருமற்ற அனாதை எனக்குத் துணையோ, உறவோ எதுவும் கிடையாது. நான் என்ன செய்வேன்? எனக்கொரு கூலியாள் கிடைக்கமாட்டானோ? என்று ஏங்கி அழுது வருந்தினாள்.

வந்தியின் சோகக் குரலுக்குச் செவிசாய்த்த சோமசுந்தரப் பெருமானும் ஒரு கூலியாளாகித் தம் திருக்கோவிலை விட்டு வெளியே வந்தார். அழுக்குப் பிடித்த பழைய துணியை இடுப்பிலே அணிந்திருந்தார். சும்மாடு வைத்து அதற்கு மேல் ஒரு கூடையைக் கவிழ்த்திருந்தார். தோளின்மீது மண்வெட்டியைச் சுமந்திருந்தார். வேதாந்தத் திருவடிகள் தரைதோய நடந்து வந்தார். கூலி தந்து என்னை வேலைக்கு வைத்துக் கொள்பவர் உண்டோ? என்று கூவிக்கொண்டே வந்தி வாழ்ந்த விதியிலே வந்து தோன்றினார்.

யாருமற்ற அனாதையான வந்தி கூலிக்காரன் குரலைக்கேட்டுப் பெரிதும் மகிழ்ச்சி கொண்டாள். தன்னருகே வந்து நின்ற தாயினும் பெரிய தயாபரனான தெய்வக்கூலியைப் பார்த்து, எனது பங்குக்கு விடப்பட்ட கரையை அடைத்துத் தருவாயா? என்று வினாவினாள். அம்மையே அடைத்துத் தருவேன்; எனக்கு என்ன கூலி தருவாய்? என்று இறையவர் எதிர் விளம்பினார். நான் விற்பனை செய்யும் பிட்டையே உனக்குக் கூலியாகத் தருவேன் என்றாள் வந்திக்கிழவி. நிரம்ப எனக்கு இப்போது மிகவும் பசியாக இருக்கிறது. உதிர்ந்த பிட்டையெல்லாம் எனக்குத் தந்துவிடு அதை உண்டு நான் சற்று இளைப்பாறிவிட்டு உனது பங்கை அடைத்துத் தீர்ப்பேன், என்றார் கடவுட் கூலியாள். வந்தியும் உதிர்ந்த பிட்டை அள்ளிக் கொடுத்தாள். பெருமானும் பிட்டு நிரம்ப நன்றாக இருக்கிறது. இது

சோமசுந்தரப்பெருமானுக்கே உகந்ததாகும் என்று சொல்லி அம் மூதாட்டியினது பக்தியுடன் கலந்து அதனை உண்டார். அப்பனும் அம்மையும் இல்லாத எனக்குப் பரிவுடன் பிட்டுண்பித்த அன்னையே! இனி நான் வேலைசெய்யப் போகிறேன் என்று சொல்லிச் சென்றார்.

ஆற்றுக்கரையை அடைந்த திருக்கூலியாள், நான் வந்திக் கிழவியின் கூலி என்று தம்மைக் கொள்ளுமாறு செய்து கரையை அடைக்கத் தொடங்கினார். மண்ணை வெட்டுவார், கூடையில் போட்டுத் தலைமேலே வைத்துக் கொள்வார். கனம் என்று நினைத்து கீழே கொட்டி மறுபடியும் குறைத்து எடுத்துக் கொள்வார். சும்மாட்டை விழச் செய்வார்; அதனைத் தலையிலே இறுக்கிக் கட்டிக் கொள்வார்; பிறகு விரைந்து சென்று மண்ணைக் கரையிலே கொட்டுவார், இப்படி இரண்டு முறை செய்ததும் களைப்பு மேலிட்டு விடும்; உடனே, அருகேயிருந்த மர நிழலை யடைந்து படுத்துவிடுவார், திடீரென்று தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தார், எழுந்ததும் கூத்தாடினார், பாட்டுப் பாடினார், மணலைக் குவியல்செய்து இங்குமங்கும் தாண்டினார். பித்துப் பிடித்தவர் போலச் சும்மா இருந்தார், மீண்டும் மீண்டும் பசி கொண்டவராகப் பிட்டு வாணிச்சியிடம் சென்று பிட்டு வாங்கி உண்டார். இடையிடையே கரையை அடைப்பதிலே அளவற்ற அக்கறை காட்டுபவர்போல நடித்தார். மண்ணைத் தொடுவதும் எடுப்பதும் கூடையில் போடுவதும், நடப்பதும் இடறுவதும், மண்ணைக் கூடையோடு தண்ணீரில் போடுவதும் கூடையை நீந்தி எடுத்து வருவதுமாக என்னவெல்லாமோ கூலிக்குப் பொருந்தாச் செய்கைகளாகச் செய்து கொண்டிருந்தார். தண்ணீரிலே நீந்துவதே ஒரு பெருவிளையாட்டாகக் கொண்டார். பெருமூச்சு விடுவார்; தள்ளாடி நின்று கலங்குவார். மடியிலுள்ள பிட்டைத் தானும் தின்று பிறருக்கும் ஈவார். அனைத்தையும் கடந்த பரம்பொருள் மிகவும் எளிமையாகி வந்த தன்மையிலே உலகத்துச் சாதாரண மக்களோடு இயைந்து பழகும் கூலியாளாகத் திருவிளையாடல் செய்தருளினார்.

வேலை வாங்குவோர் பிரம்பும் கையுமாக அகப்பட்ட கரைப் பகுதிகளைப் பார்த்துச் சென்றனர். கரையினைச் சரிபார்த்துக் கொண்டு வந்த ஏவலாளர்கள் வந்தியின் பங்கு இன்னமும்

அடைபடாதிருப்பதைக் கண்டு கொண்டனர். மிகவும் கோபம் கொண்டு, வந்தியின் கூலியாள் பார்த்து, தம்பி! எல்லாப்பங்குகளும் அடைபட்டிருக்கின்றன. உன் பங்கு மட்டும் ஏன் இன்னமும் அடைபடவில்லை? காரணம் என்ன? என்று கேட்டனர். அதற்கு விடையாக ஆலவாய் அண்ணல் கருவத்துடன் ஏதும் பேசாமல் நின்றார். வெள்ளம் அடுத்த கரையை இடித்துத் தளள்ளிச் சென்றது. அதைப் பார்த்தும் கூலியாள் ஏதும் செய்யவில்லை. கூலியாளின் கட்டழகிலே மயங்கிய பிரம்பாளர்கள் அடிக்கப் பயந்தனர். இவன் என்ன பித்தனா? எத்தனா? இவனது உடலைப் பார்க்கும் போது கூலிக் குழைப்பவன் அல்ல என்றே தெரிகிறது. வேலைக்கு முன்பே கூலிவேறு வாங்கி விட்டான்; வேலையும் செய்யக் காணோம். நம்மையும் மதிக்காமல் இருக்கிறான். இவனைப் பற்றி மன்னவரிடம் விண்ணப்பம் செய்வதே முறை, என்று எண்ணிப்போயினர். பாண்டியன் முன்சென்று பணிந்து நின்று, வேந்தே எல்லாரும் அவரவர் பங்குக் கரையுடைப்பை அடைத்து விட்டனர். வந்தியின் கூலியாள் மட்டும் இன்னமும் அடைக்கவில்லை. அழகிற் சிறந்த மேனியனாக அந்தக் கூலியாள் ஒரு ராஜகுமாரனைப் போல் ஆடியும் பாடியும் ஓடியும் சாடியும் பொழுது போக்கிக் கொண்டிருக்கிறான். வேலையைப்பற்றிக் கொஞ்சமும் கவலை கொள்ளவில்லை, ஐயனே! சொக்கழகு கொண்ட அவனைக் கோலால் அடிக்க மனம் வரவில்லையே, என்று செப்பினர்.

பாண்டியன் விரைந்து எழுந்தான். மந்திரிமார்கள் உடன்வர வையையின் கரையினை அடைந்தான், கரை சரியாக அடைபட்டு உயர்ந்திருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே வந்து மகிழ்ந்தான். பார்த்து வரும்போது இடையே வந்தியின் பங்கு அடைபடா மலிருப்பதையும் அடுத்த கரையையும் வெள்ளம் கரைத்து இடித்துச் செல்வதையும் கண்டான். கடும் கோபம் கொண்டான் பாண்டியன். இக்கரை யடைப்பவன் எங்கே? என்று சீறினான் மன்னன். சினம் கண்டு பயந்த கோலாளர் பரம்பொருட் கூலியாரின் கைகளைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தனர். இவனே வந்தியின் கூலியாள், என்று கூறி மன்னவன் முன்பு நிறுத்தினர். அரிமர்த்தன பாண்டியன் கூலியாளைக் கண்டு கோபித்தான். தனது பொற்பிரம்பைக் கையிலெடுத்து, அண்டபிண்ட சராசரங்களையும் சமஸ்தலோகங்களையும் ஸஜீவ

நிர்ஜீவ வஸ்துக்களையும் தனது பெருந் திருமேனியாகக்கொண்ட இறைவனது முதுகிலே ஓங்கி அடித்தான். உடனே அனைத்துள்ளும் நிறைந்த சோமசுந்தரப் பெருமான் கூடையுடன் மண்ணைக் கரையுடைப்பிலே கொட்டிவிட்டு மறைந்தருளினார்.

இறைவன் முதுகிலே பட்ட அடி எங்கும் பட்டது. பாண்டியன் முதுகிலே, மந்திரிமார் முதுகிலே, வீரர் முதுகிலே, ஏவலர் முதுகிலே, அரசியர் முதுகிலே, ராஜகுமாரர் முதுகிலே யெல்லாம் பட்டது. ஐம்பெரும் பூதங்கள் மேலும் ஈரேழு பதினாலு புவனங்கள் மீதும் பிரம்ம விஷ்ணு இந்திராதி தேவர்கள் மேலும் பட்டது. அடிபட்ட அனைத்தும் கலங்கின, மயங்கின, கூடற் பெருமானின் திருவிளையாடல் நன்கு விளங்கியது.

திருமேனியிலே பிரம்படிபட்டதும் ஒரு கூடை மண்ணைக் கொட்டி, உடைப்பை நிரப்பிக் கரையைக் கட்டி உயர்த்திய பின் மறைந்தருளிய இறைவனது அரும்பான்மையைக் கண்ட மன்னனது கோலாளர் வந்திக் கிழவியினிடம் சென்று, வேந்தரிடம் வருக, என்று செப்பினர். அரசனது ஆணையாளர் சொல்கேட்ட கிழவி பயந்தாள், பாண்டியனால் என்ன துன்பம் விளையுமோ? என்று கவன்று சோமசுந்தரப் பெருமானை வேண்டித் துதித்தாள். அதே சமயத்தில் வானத்திலிருந்து சிவகணத்தவர் ஒரு விமானத்துடன் இறங்கி வந்தனர். அம்மையீர்! வருக என்று வந்தியாரை விமானத்திலே அமர்த்திக் கொண்டு சிவலோகம் சென்றனர். அப்போது தேவர்கள் பூ மழை பொழிந்தனர், இன்னிசை முழங்கியது; வேதநாதம் ஒலித்தது.

நடந்தேறிய நிகழ்ச்சிகளை யெல்லாம் கண்டு வியந்து ஓர்ந்த அரிமர்த்தன பாண்டியன் மனத்திலே சந்தேகம் கொண்டு நின்றான். அது சமயம் மண்சுமந்து கூலி கொண்டு அக்கோலால் மொத்துண்டு புண்சுமந்த பொன் மேனிப் பிரான் வானத்திலே நின்று அனைவரும் கேட்கும் வண்ணம், செங்கோற் பாண்டிய! உன்பொருள்களனைத்தும் அற வழியிலே தொகுக்கப்பட்டுத் தூய்மையாக விளங்கியவை. அவையனைத்தும் நமக்கும் நம்முடைய மெய்யன்படியார்களுக்கும் திருவாதவூரன் பக்தியுடன் கொடுத்தான். அத் தன்மையை உணரமாட்டாத நீ அவனை மிகவும் துன்பப்படுத்தினாய். அதுகண்டு பொறாத நாம் நரிகளைப் பரிகளாக்கினோம்; பரிகளை மீண்டும்

நரிகளாக்கினோம்; மறுதினமும் வாதவூரனைக் கொடுமைப் படுத்தினாய். அது பொறுக்காத நாம் வையையிலே வெள்ளம் பெருகச் செய்தோம். வந்தியின் கூலிக்காரனாக வந்தோம், பிட்டுண்டோம். பிரம்படிபட்டோம். இவ்வளவும் நாம் செய்தது திருவாதவூரன் பொருட்டாகத்தான், வாதவூர் வேதியன் தன்மையை நீ சற்றேனும் அறிந்து கொள்ளவில்லை. அவன் எம்மிடம் பக்தி வைத்துச் செயல் புரிந்ததாலே உனக்கு இருமையின் பத்தையும் ஒருங்கே தேடிவைத்த பெருந்தகையாவான். அவன் எல்லா வகைப் பற்றையும் விட்டொழித்தவன், வாதவூரனை அவனது விருப்பத்தின் படிக்கே நடக்குமாறு விட்டு விடுக. நீயும் கனமதுர நீள் சௌக்ய சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வு வாழ்ந்திருப்பாயாக, என்று இயம்பியருளினார்.

விண்ணிலிருந்து வந்து தெய்வத் திருமொழிகேட்ட பாண்டியன் அரிமர்த்தனன் பயமும், ஆச்சரியமும், ஆனந்தமும் கொண்டான். சோமசுந்தரப் பெருமானது மெய்யன்பரான வாதவூரர் எங்கே சென்றார்? என்று பல இடங்களிலும் தானே தேடிச்சென்றான். இறுதியாக மதுரேசர் சன்னிதியிலே சிவ யோகத்திலே ஆழ்ந்திருந்த மாணிக்கவாசகப் பெருமானைக் கண்டான். அவரது அடிகளில் விழுந்து வணங்கினான். பரமசிவபக்தரே எனது தாழ்ந்த அறிவின் காரணமாகத் தங்கள் திருமேனிக்குத் தீங்குகள் பல இழைத்தேன். தங்கள் பெருந்தகுதியையும் மிகவுயர்ந்த நிலையையும் அறியாது நான் செய்த பொல்லாங்குகளை யெல்லாம் பொறுத்தருள வேண்டும் புண்ணியனே; என்று கூறி இரங்கி வேண்டி நின்றான்.

மாணிக்கவாசகப் பெருமானது மண்டபத்திலே அருட்சோதி தோன்றியது. புன்னகை பூத்தவாறு சிவலீலா விபூதியை விளக்கியருளினார் சிவானுபூதிச் செல்வ ராம் மணிவாசகர். பின்னர் சிவபெருமானது மகாதேவ சதாசிவத் தன்மையை விளக்கிவிட்டு, அவரது ஞானகாசமாக விளங்கி நிற்கும் பொன்னம்பலமான தில்லையம் பதிக்கும் வருமாறு அடியேனுக்கு ஆணையிட்டருளியுள்ளார். ஆதலால் அடியேன் அங்கே போகவேண்டும்; என்னை விடுவிப்பீராக என்று அரிமர்த்தன

பாண்டியனிடம் கூறி விட்டுச் சோமசுந்தரப் பெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தில்லைத் திருப்பதி நோக்கிப் புறப்படலானார். பாண்டியனும் சிறிது அவரைப் பின் தொடர்ந்து சென்றான். பின்னர் அவரது திருவடி தொழுது விடைபெற்றுத் திரும்பினான்.

அரிமத்தன பாண்டியன் திருக்கோவிலுக்குச் சென்று சோமசுந்தரப் பெருமானைத் தரிசித்து வணங்கித்தானும் அடிக்குமாறு முதுகு காட்டியருளி எழுந்தருளி வந்த தன்மையைப் போற்றிப் பரவினான். அன்று தொடங்கி பல வகைத் திருப்பணியும் பூஜை திருவிழாக்கள் ஆகியவற்றை மிகுந்த சிறப்புடன் செய்வித்து அன்பும் அருளும் இன்பமும் நிரம்பிய நல்லாட்சி புரிந்து வந்தான்.

அரிமர்த்தன பாண்டியன் அறநெறி பற்றிச் செங்கோல் ஓச்சுகின்ற நாளிலே அவனது தவப் பயனே போன்று சகநாதன் என்ற நற்புதல்வனைப் பெற்று மகிழ்ந்தான். பின்னர் உரியகாலத்திலே தன் அருமருந்தன்ன திருக்குமாரனுக்குப் பட்டாபிஷேகம் செய்து விட்டுச் சிவலோகம் சேர்ந்தான்.

*(தொடரும்...)*

---

## மடாலய நிகழ்வுகள்

26.03.2022 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் முனைவர் பேராசிரியர் ச.ஆறுமுகம் சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டம் நடுகல் காதை குறித்துச் சொற்பொழிவாற்றினார்.

23.04.2022 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் முனைவர் கா.சத்தியமூர்த்தி சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டம் வாழ்த்துக் காதை குறித்துச் சொற்பொழிவாற்றினார்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

உ

சிவமயம்

அருள்மிகு மதுக்கார நாச்சியம்மன் துணை



# கோவிலூர்

# அருள்மிகு சிதம்பர விநாயகர் கோயில்

# கும்பாபிஷேகம்

**நாள் : 09.06.2022, வியாழக்கிழமை**

**சிதம்பர விநாயகர் வணக்கம்**

முத்தே! என் சித்தத்து ஒளியாய் விளங்கும் சதாசுகமே
பக்தே பிறந்து பிறந்தே இந்நாள்வரைப் பட்ட துன்பக்
கொத்தே அகற்றும் குருவே! பிறக்கும் குண குணிக்கும்
வித்தே! கழனிச் சிதம்பரம் என்னும் விநாயகனே!

காரைக்குடி அருகே நகரத்தார்களுக்கு உரிய கோவிலூர் ஆதீனம் அருகே 150 ஆண்டுகளுக்கு முன்பு கோவிலூர் ஆதீனம் 3வது பட்டம் **ஸ்ரீலஸ்ரீ கருணாநிதி (எ) சிதம்பர ஞானதேசிக சுவாமிகள்** அருளாணைப்படி எங்கள் குடும்பத்தாரால் 1854ல் கட்டப்பெற்று தற்பொழுது **கோவிலூர் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள், தஞ்சை குருஜி, மானாமதுரை ஸ்ரீ மஹா பஞ்சமுக ப்ரத்தியங்கிரா தேவி கோவில் ஸ்ரீலஸ்ரீ சுவாஜி, ஸ்ரீ மாதாஜி** அருளாசியுடன் **அருள்மிகு சிதம்பர விநாயகர் கோயில் மகா கும்பாபிஷேகம்** சுபகிருது வருடம் வைகாசி மாதம் 26ம் தேதிக்கு 9.6.2022 வியாழக்கிழமை காலை 10.30 - 11.00 மணி அளவில் நடைபெற உள்ளது. 2022 ஜுன் 7,8,9 மூன்று நாட்களும் 4 கால யாகசாலை பூஜை மற்றும் அன்னதர்மம் நடைபெறும். நகரத்தார்களும் பொதுமக்கள் அனைவரும் கலந்துகொள்ள அன்புடன் வேண்டுகிறோம். தங்கள் நல்வரவை பெரிதும் விரும்பும் காரைக்குடி பெத்தா முருகப்ப செட்டியார் **(அ.முத்து.அ/அ.முரு/சோம.மு.வகை)** குடும்பத்தார்கள்.

தொடர்புக்கு : நா.நாச்சியப்பன் - 9486651700
நா.முருகப்பன் - 9442676606
முரு.அண்ணாமலை - 9840424292

**ARULMIGU CHIDAMPARA VINAYAGAR TRUST**
**81, M.M. Street, Karaikudi - 630 001.**
**The Karur Vysya Bank Limited**
**Koviloor Branch**
**CA Account No : 1865135000002082**
**IFSC Code : KVBL0001865**